

"மாயூரம் முனிசீப்"

# வேதநாயகம் பிள்ளை

## வரலாறும் நூலாராய்ச்சியும்

ஆசிரியர் :

இராவ்சாகிப் கு. அருணசலக் கவுண்டர்

விலை ரூ. 1—8—0

"மாயூரம் முனிசீப்"

# வேதநாயகம் பிள்ளை

## வரலாறும் நூலாராய்ச்சியும்

எழுதியவர் :

இராவ்சாகிப் கு. அருணசலக் கவுண்டர்

தி அலய்டு பப்ளிஷிங் கம்பெனி

பிலிப்ஸ் தெரு :: சென்னை-1

## பொருளடக்கம்

# கொங்குராயர்கள்

## அதிட்டசாலி :

தோன்றிற் புகழொடு தோன்றுக ; அஃதிலார்
தோன்றலின் தோன்ருமை நன்று—என்பது குறள்

பிறக்கும் போதே புகழுடன் பிறந்தவர் யார்? அத்தகைய ஒருவர் இதிகாசத்தும் இல்லை; புராணத் திலும் இல்லை. பிறந்த பிறகு புகழ் பெறுவதும் எளிதான செயல் அல்ல; ஏணியிலேற எத்தனையோ இடைஞ்சல்கள் உண்டு; அவற்றை எல்லாம் கடந்து சிலர், புகழ் எய்துகின்றனர். இவர்கள் அதிட்டசாலி கள். இவர்களிலே ஒருவர் தான் முனிசீப் வேதநாயகம் பிள்ளை.

தமிழ்த் தாயின் தவப் புதல்வராக வேதநாயகம் பிள்ளை பிறந்தார். இவர் பிறந்தது, 11-10-1826-ல். பழமையும் பண்பும் வாய்ந்த கத்தோலிக்கக் குடும்பம் ஒன்றிலே இவர் பிறந்தார்.

இவர் பிறந்த ஊர், வேளாண் குளத்தூர்; மதுரை வழியிலே திருச்சிராப்பள்ளியை அடுத்த ரயில் நிலையம் குளத்தூர்; அதனைச் சூழ்ந்த பிரதேசம் கோனாடு

என்று முன்னம் கூறப்பட்டது. கோனூடு சங்க காலம் முதற் கொண்டு, வளத்திலும் வண்மையிலும் மேம்பட்டு வருவது; புலமையிலும் போற்றப்பட்டு வருவது. கோனூட்டைச் சார்ந்த எறிச்சலூர் மாடலன் சங்கப் புலவர் அல்லவா ?

வேதநாயகம் பிள்ளையின் பெற்றோர்கள், சவரி முத்துப் பிள்ளையும் ஆரோக்கிய மரியம்மாளும் ஆவர். குளத்தூர் எல்லையிலே மிகுந்த செல்வாக்குள்ள சீமான் சவரி முத்துப் பிள்ளை. கார்காத்த வேளாள சாதியிலே கொங்குராய கோத்திரத்தைச் சார்ந்த இவர், பலர் மெச்ச வாழ்ந்தார். இவருக்கு வாழ்க்கைத் துணையாய் அமர்ந்த ஆரோக்கிய மரியம்மாள், அக்காலத்திலே பிரபல டாக்டராய்ப் பெயர் பெற்ற மரிய சவரியா பிள்ளையின் அருமை மகளாவார்.

ஆங்கிலமொழி அறிந்த தமிழர் அந்த நாள் அருமை; ஐரோப்பிய முறையிலே பயிற்சி பெற்ற மருத்துவர் மேலும் அருமை; மருத்துவக் கல்லூரியோ ஆங்கில கலா சாலையோ இல்லாத காலம் அது. மரிய சவரியாபிள்ளை, ஆங்கிலம் பிரஞ்சு முதலிய மொழிகளைத் தமது சொந்த முயற்சியால் அறிந்தார்; ஐரோப்பிய மருத்துவ முறையைப் பயின்றார்; அதிலே தேர்ந்தார்; டாக்டராகச் சேவை செய்து சிறப்படைந் தார். மதுரை திருச்சி தஞ்சை வட்டங்களுக்கு

அவர் ராணுவ டாக்டராக நியமிக்கப் பட்டார். இந்த மாவட்டங்களுக்கு மத்திய தலமாகிய குளத்தூரிலே ஒரு புதிய பொது ஆஸ்பத்திரி ஏற்பட்டது. மரிய சவரியா பிள்ளையும் மருத்துவராக அங்கே அமர்ந்தார். 'நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தீர்க்கும் வாய்நாடி.' வாய்ப்பச் செய்து, அவர் தன்வந்தரியாகப் புகழ்வாய்ந்தார். வை சூ ரி பரவாமல் தடுக்க, 'அம்மைகுத்தும்' முறை, இவர் காலத்திலேதான் முதன் முதல் வழக்கில் வந்தது. வைசூரி கொடிய தொத்து நோய்; இதற்குப் பலியாய் வந்த மக்கள் அக்காலம் கணக்கில்லை. ஒட்டுவாரை ஒட்டி, உயிர் கொள்ளும் இக்கொள்ளை நோயைத் தவிர்க்கவும் தடுக்கவும் இவருக்குக் கீழே அம்மை குத்துவார் பலர், அலுவல் பார்த்துவந்தனர்; சட்ட மூலமாய்க் கட்டாயப் படுத்தப்பட்டும், அம்மை குத்திக் கொள்ளலைக் கடத்தி விடுபவர் தொகை இன்றும் அதிகம் என்றால், நூறு வருடத்துக்கு முன் அம்மை குத்தும் முறையை அமுல் நடத்தும்போது சவரியா பிள்ளை எத்தகைய சங்கடங் களைச் சமாளித்திருப்பார். எண்ணிப் பார்த்தால் அவருடைய சாதுரியத்தையும் சாமர்த்தியத்தையும் நாம் வியவாமல் இருக்க முடியாது. பெரிய பிரபுவாகவும், அரிய பரோபகாரியாகவும் வாழ்க் கையிலே இவர் மேம்பட்டு விளங்கினார். இவருடைய மகள் வயிற்றுப்பிள்ளை-பேரர் தான்-நமது விற்பன்னர் வேதநாயகம்.

## மதுரநாயகம் மதம் மாறியது :

வேதநாயகம் பிள்ளையின் முப்பாட்டன் மதுர நாயகம் பிள்ளை. சுமார் இருநூறு வருடங்களுக்கு முன்னே இவர் வாழ்ந்தார். அக்காலத்தில் நவாபுகளும் நாயக்க மன்னர்களும் ஐரோப்பியரும் போட்டியிட்டுத் தமிழ் நாட்டை அலைக்கழித்து வந்தார்கள். நிலையான அரசின்றிக் குடிமக்கள் அல்லலுற்றனர்; நாடெங்கும் கொள்ளையும் குழப்பமுமே. உயிர் உடமைகளுக்குப் போதிய பாதுகாவல் இல்லை. சாதிகள் ஒன்றோ டொன்று தலை தடுமாறி யாரும் ‘ஓதிய நெறியில் நில்லாது ஒழுக்கமும் மறந்துபோன’ இக்கால எல்லையிலே குளத்தூர் மிராசுதார் மதுரநாயகம் பிள்ளை, மதம் மாறிக் கிறித்தவரானது ஓரதிசய சம்பவமே.

அப்போது அவருக்கு வயது ஐம்பது. சூலைப் பிடிப்பு என்ற கொடிய நோய்க்கு இவர் இரையானார். அதனாலே எழுந்து நடமாடவும் இயலாதவராய், அவர் அவதிப்பட்டார். மணி மந்திர மருந்துகளால், நலமின்றி நலிந்த அவர், தமது குல தெய்வமாகிய ஐயனார் கோயிலுக்குப் போய்த் தமது நோயகலப் பிரார்த்தித் தார். சாட்டாங்கமாகச் சந்நிதியிலே விழுந்து, ‘பிணி அகலுந்துணையும் எழமாட்டேன்’ என்று மனவுறுதி யுடன் எட்டு நாள் வரையிலும் பட்டினி கிடந்தார். ஒன்பதாம் நாளிரவு, ஐயனார் அவர் கனவிலே தோன்றி

'என்னிலும் பெரியன் ஆவூரிலே வந்திருக்கிறுன்; அங்கே சென்ருல் நோய் நீங்கும்' என்று சொல்ல, மதுரநாயகம் பிள்ளை திடுக்கிட்டெழுந்து, அச் செய்தியைத் தமது உறவினர்க்குத் தெரிவித்தார். வைதிக சைவராகிய உறவினர் தடுக்கவும் கேளாதவராய்க் குடும்பத்துடன் ஆவூருக்குப் பயணம் ஆனுர். குளத் தூரினின்றும் ஆவூர் ஐந்தாறு கல்லே.

மதுரை மிஷனைச் சேர்ந்த இயேசு சபைக் குருக்களிற் சிலர் அப்போது புதுக்கோட்டைத் தொண்டைமானிடம் அநுமதி பெற்று, ஆவூரிலே மாதா கோயில் அமைத்துக் கத்தோலிக்க சமயத்தைப் பரப்பி வந்தனர். ஆன்ம நோயுடன் உடற்பிணி அகலவும் அவர்கள் அங்கே மருத்துவம் புரிந்து வந்தனர். மதுர நாயகம் பிள்ளை குருமார்களைக் கண்டு 'சுடுகின்றது, சூலை; அது குடலோடு தொடக்கி முடக்கியிட ஆற்றேன் அடியேன்' என்று, தண்டனிட்டு வேண்டினுர். நஞ்சாகி வந்து, நலியும் அதனைத் தீர்த்தால் குடும்பத்துடன் தாம் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்வதாகவும் கூறினுர். கடவுளை வாழ்த்திக் குருமார்களும், சிலுவை வரைந்து, ஒருவகைத் தயிலத்தை நோயாளிக்குப் புறம் பூசியும், மருந்தூட்டியும் வந்தார்கள். கடவுள் அருளாலும், மருந்து வலியாலும், கொடிய நோயும் குணப்பட்டு வரவே, மதுர நாயகம் குடும்பத்துடன் இயேசு சமயத்தை ஏற்ருர். நோய் முழுதும்

தீர்ந்து, சூலேயும் சுகமாயிற்று. அதனுல், கத்தோலிக்க சமயத்திலே ஆழ்ந்த பற்றுதலும், இயேசு நாதரிடம் பெருகிய பக்தியும் உடையராய், மதுரநாயகம் குருமார்களிடம் விடை பெற்றுக் குளத்தூர் வந்தார். சிவநேசராகிய அவரது உற்ருர் உறவினர்கள் அவரை வெறுத்து விலக்கினுர்கள்; பகைத்தார்கள்; பல்வேறு தீங்குகளேச் செய்தார்கள். மதுரநாயகம் பிள்ளே அதனுல், மனந்தளரவில்லே. 'இன்னதென அறிகில்லார் தாம் செய்வது; இவர் பிழையை மன்னியும்' என்று, இறைவனே வேண்டி, மன நலமும் அரும் பொறையும் வாய்ந்த கத்தோலிக்கராகவே அவர் வாழ்ந்து வந்தார்.

## மதுரை மிஷன் :

மதுரநாயகம் பிள்ளேயைக் கிறித்தவ மதத்திலே சேர்த்துக் கொண்ட மதுரை இயேசு சங்கத்தைப்பற்றி நீங்கள் அறிய வேண்டாமா? தத்துவ போதகர் என்ற ராபர்ட் டி நொபிலி 1606-ல் மதுரையிலே தாபித்த இயேசு சங்கம் எத்தனேயோ இன்னல்களே எதிர்த்து நின்றது; இடையூறுகளேக் கடந்து வளர்ந்தது. தஞ்சையிலே அரசு புரிந்த ஷாஜி என்ற மராட மன்னன் (1682...1711) கிறித்தவர்களுக்குப் பல கேடுகளேப் புரிந்தான்: அவனுல், குருமாருள் ஒருவர்[1]

1. Fr. Joseph Carvalto

சிறையிலே இறந்தார்; மற்றவர் [2] சித்திரவதைக் காளானூர். மறவர் சீமையிலே கிழவன் சேதுபதியால் வேறொருவர் [3] கொலை செய்யப்பட்டார். என்றாலும், இயேசு சங்கம் எழுந்த நூறு வருடத்திலே, அதன் முயற்சியால் 1,50,000 தமிழ்க் கிறித்தவர் அதனைச் சார்ந்து வாழ்ந்தனர் என்பது அதற்கு மிகப் பெரிய வெற்றி 'அல்லவா? இயேசுசங்கத்தாருடைய அரிய தியாகத்தாலும் பெரிய சேவையாலும் தமிழகத்தின் பல்வேறிடங்களிலே இயேசு சபைகள் எழுந்தன. அவற்றுள் ராமையநாயக்கன்பட்டி, மலையாண்டிப் பட்டி, ஆவூர், வடுகர்பட்டி, ஏலாக்குறிச்சி, ஐயம் பேட்டை முதலிய இடங்கள் பிரசித்தி பெற்றவை.

அக்காலத்திலே இயேசுசபைக் குருமார்கள் நடையுடை பாவனைகளிலே இந்து சந்நியாசிகளைப் பின்பற்றினார்கள்; மது மாமிசங்களை விலக்கினார்கள்; தமக்குரிய ஐரோப்பியப் பெயர்களைத் துறந்து, தமிழ்ப் பெயர்களைத் தரித்துக் கொண்டார்கள். பெஸ்கி, வீரமாமுனிவர் ஆனார். அரையிலே காவியும், கையிலே கமண்டலமும் காதிலே குண்டலமும் பூண் டார்கள்; என்றாலும், சாதி இந்துக்களுடைய கோப, தாபங்களுக்கு அவ்வப்போது இவர்கள் ஆளா காமல் இல்லை. இயேசுசபைத் தாபனங்கள் பல

---

2. Fr. Michel Bertoldi
3. John D. Britto

தகர்க்கப்பட்டன ; கிறித்தவர் தாக்கப் பட்டனர். புதுக் கோட்டையைச் சார்ந்த ஆவூர் மட்டும், கிறித்தவர்க்குப் பாதுகாப்புத் தந்தது. இந்த ஆவூர் சபையிலே தான் குளத்தூர் மிராசுதார் மதுரநாயகம் பிள்ளை ஞானஸ்நானம் பெற்றது.

மதுரநாயகம் பிள்ளையின் முன்னோர்கள் வழிவழி வேளாண் குளத்தூரிலே, மேன்மையாய் வாழ்ந்து வந்தார்கள். இவர்கள் செந்தமிழ் வேந்தர்க்கு முடி சூட்டும் முதன்மை வாய்ந்தார்கள். ஆதலின், இவர்கள் வாழ்க்கைக்கு அமைந்த பிரதேசம் கோனாடு என்று பெயர் பெற்றது என்பர், மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.

இவர்கள், கருநாடக நவாபுகளிடத்திலே திவான் முதலிய பதவிகளில் அமர்ந்து, அளவற்ற நிலபுலங் களைச் சம்பாதித்தார்கள் ; குளத்தூரிலே நிலையாக வாழ்ந்து வந்தார்கள். இவர்கள் கொங்குராயர்கள் ! இந்தக் கோத்திரத்தைச் சார்ந்தார் திருநெல்வேலி தஞ்சை முதலிய சில்லாக்களிலே சிறந்து வாழ்கின் றனர். இவர்களிலே முதன்மையானவர் முன்சீப் வேதநாயகம் பிள்ளை.

## கல்விப் பயிற்சி:

எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும் அல்லவா ? ‘ முகக்கண்ணிருந்தும் சூரியப் பிரகாசம்

இல்லாவிட்டால் என்ன பிரயோசனம்? முகக் கண்ணுக்குப் பிரகாசம் எப்படி அவசியமோ அப்படியே அகக் கண்ணுக்குக் கல்வியாகிய ஞானப் பிரகாசம். வெட்டித் திருத்திச் சாகுபடி செய்கிற நிலம் மட்டும் பலன் கொடுக்குமே அல்லாது, சீர்திருத்தம் செய்யப் படாத நிலம் பலன் கொடுக்குமா? திருத்தாத நிலம் கல்லும் முள்ளும் புல்லும் புதரும் மண்டிக் கெட்டுப் போவது போல், கல்விப் பயிற்சி இல்லாத மனம் துர்க்குணங்கள் நிறைந்து கெட்டுப் போகாதா?' என்று வினவுகிருர் வேதநாயகம்.

## பெரிய வீடுகளிலே :

சென்ற தலைமுறையிலே பெரிய வீடுகளில் பிள்ளைகள் எவ்வாறு வளர்ந்தார்கள்? அங்கே கல்வி எவ்விதம் கருதப் பட்டது? கற்பிக்கப் பட்டது? இவற்றை நீங்கள் அறிய வேண்டாமா? வேதநாயகம் பிள்ளை எழுதிய பிரதாப முதலியார், பேசுகிருர் தமது பிரதாபத்தைப் படியுங்கள்.

'எட்டாம் வயது எட்டிப் பார்க்கிறவரை நான் நிரட்சர குட்சியாய் இருந்தேன். என் மாதாவினுடைய அலட்டைப் பொறுக்க மாட்டாமல், என் தந்தையார் என்னை ஒரு நாள் தனியே அழைத்து, "உன் தாயார் உன்னைப் பள்ளிக்கூடத்திலே வைக்க வேண்டும்

என்கிருளே! நீ என்ன சொல்லுகிருய்?'' என்று கேட்டார். உடனே நான், என் தந்தையை நோக்கி, ''ஐயா, நானும் படிக்க வேண்டுமா? எனக்கிருக்கிற சுய புத்தி போதாதா? ஏழைகள் சீவனஞ் செய்து பிழைக்க வேண்டியதற்காக, அவர்களுக்குக் கல்வி அவசியந்தான். நான் படிக்க வேண்டிய அகத்தியம் என்ன? ஏதாவது வாசிக்க வேண்டியிருந்தால் வாசிக்கவும், எழுதவேண்டியிருந்தால் எழுதவும், நமக்குக் காரியத்தர்கள் இல்லையா?'' என்றேன். இது நான் சுயமாகச் சொன்னதல்ல. என் பாட்டியார், அடிக்கடி அந்த வார்த்தைகளைச் சொல்ல நான் கேள்விப் பட்டிருந்ததால், அந்தப் பிரகாரம் நான் பாடம் பண்ணிக் கொண்டு சொன்னேன். அந்த வார்த்தைகள் என் சொந்த வார்த்தைகள் என்றெண்ணி, என் பிதா ஆனந்த சாகரத்தில் மூழ்கிஞர். இவ்வளவு சாதுரியமாய் நான் பேசிய சமாச்சாரம் வீடு முழுதும் பரவி, எங்கள் காரியத்தர், கணக்கர்கள், பந்துக்கள், பணிவிடைக்காரர்கள் முதலான சகலரும் ஒவ்வொருவராய் வந்து, என்னுடைய சாமர்த்தியத்தைப் புகழ ஆரம்பித்தார்கள். என்னுடைய பாட்டியாரும் தம்முடைய உபதேசம் என்பதை மறந்து விட்டு, என்னைக் கட்டித் தூக்கிக் கொண்டு, ''என் கண்ணே! பொன்னே! இவ்வளவு சாமர்த்தியமாய்ப் பேச, யாருக்காவது வருமா?'' என்று சொல்லிக் கொண்டு, நான் சுவாசம்

விடுவதற்கும் இடம் இல்லாமல், வாயாலும் பல்லாலும் அநேக முத்தங்கள் கொடுத்தார்கள்.' எப்படி முதலியார் பிரதாபம் ?

## விளையும் பயிர் முளையிலே :

செல்வக் குடும்பத்திலே பிறந்தார் எனினும், வேதநாயகத்தின் வளர்ப்பு வேறு விதமாக இருந்தது. ஆரோக்கிய மரியம்மாள், அருமருந்தன்ன தமது பிள்ளை வேதநாயகத்தின் கல்விப் பயிற்சியிலே கவனம் செலுத்தினர். தாய் தந்தையர் அன்பு பாராட்டி மிகவும் அருமையாய் வளர்க்க, வளர்ந்த வேதநாயகம், உடல் நலத்துடன் உள்ளக் கனிவும் உடையர் ஆனர்; மதிநுட்பமும் குணமாண்பும் உடையவர் ஆனர். தந்தை சவரிமுத்துப்பிள்ளை, தனயனிடம் மிகுந்த வாஞ்சை வைத்திருந்தார். அதனல் இன்று தன் மகன் இன்புற்றிருந்தால் போதும் என்று, இட்டம் போலக் கொட்டம் அடிக்க விட்டு விடுவார். ஆனல், அன்னை மரியம்மாள், என்றும் அவன் சேமமாய் இருக்க வேண்டுமே என்ற கவலையுடன் நயமும் பயமும் காட்டி நடத்தி வந்தார். அதனலே, வேதநாயகம் இளமையிலே கூர்ந்த அறிவுடையராய்த் திகழ்ந்தார்; சமயோசிதமாயும் சாதுரியமாயும் பேசி வந்தார். விளையும் பயிர் முளையிலே தெரியும் அல்லவா ? சிறுவன் வேதநாயகம் நடக்கிற ஒழுங்கையும் பேசுகிற உண்மையையும் கண்டவர்கள் பிற்காலத்திலே அவன் பிரபலம் பெறுவான் என்று

கருதினார்கள். நற்குண நற்செய்கை யுள்ளவராயும் விவேக விற்பன்னராயும், சருவசன ரஞ்சகராயும் சமயச் சார்புடையராயும், வேதநாயகம் வளர்ந்து, மேன்மை வாய்ந்ததற்குக் காரணம் அவருக் கமைந்த ஆரம்பப் பயிற்சியே.

பெற்றோரிடத்தும் பிறரிடத்தும் வேதநாயகம் பத்து வயதுவரை தமிழ்க் கல்வி பயின்றார். ஓரளவு தமிழறிவிலே தேர்ந்து தெளிந்த பின், அவர், ஆங்கில மொழியைக் கற்க அவாவினார். அப்போது அவருக்குப் பிராயம் பதினொன்று. ஆண் பாடசாலையோ பெண் பாடசாலையோ இல்லாத காலம் அது. ஆங்கில மொழி அறிந்தவர் அருமை. அவ்வமயம், திரிசிர புரத்திலே தியாகப் பிள்ளை என்பவர், தென் மாகாண நீதி மன்றத்திலே மொழி பெயர்ப்பாளராக முதன்மை பெற்று விளங்கினார். ஆங்கிலம் தமிழ் என்ற இரு மொழியிலும் தேர்ந்த புலவர் அவர். அவர், சவரிமுத்துப் பிள்ளைக்கு மிகவும் வேண்டியவர்; நண்பர் வேதநாயகம் அவரிடம் ஆங்கிலம் கற்று வந்தார். விரைவிலே அதிலும் புலமை நிரம்பினார். விரும்பிய விதம் பிழை இன்றி அதைப் பேசவும் எழுதவும் தேர்ந்தார். ஆங்கிலம் பயிலும் போதே, தமிழில் செய்யுள் இயற்றப் பழகினார். பாவின் இயல் தெரிந்து, பலபாடி இளங் கவியாகத் திகழ்ந்தார். பலருடைய வேண்டுகோளின்படி, அவ்வப்போது

இவர் பாடிக் கொடுத்த பாடல்கள் மிகவும் வேடிக்கையாகவும், விநோதமாகவும் வியப்பாகவும் இருக்குமாம். கலியாண காலங்களிலே நமது வீடுகளில் நாடோடியாக வழங்கும் நலுங்குப் பாடல், சோபனப் பாடல்களை நீங்கள் அறிவீர்கள். இவற்றிலே காணப்படும் பரிகாசங்களையும் கேலிகளையும் யாவரும் அறிவர்; இந்தப் பாடல்களுக்கு வேதநாயகம் இலக்கியத் தன்மை கொடுத்தார். பிற்காலத்திலே பெருங் கவியாக இவர் பிரசித்தி பெற்றதற்குப் பயிற்சி மேடையாய் இவர் பாடிய நலுங்குப் பாடல்களிலே ஒன்று கீழே வருவது. கலியாணத்தின் போது மைத்துனரைப் பரிகசிக்கிறார்; மாப்பிள்ளையை விடப் பரிகசத்துக் குரியவர் வேறு யார்?

மைத்துனரே
இன்றுமுதல்
மகராசர் நீரே.

கொத்தார் குழலி எங்கள்
குயிலைக்
கொண்டீரே — மைத்துனரே...

உழவுத் தொழில் செய்துமக்(கு)
உடம் பெல்லாஞ் சேறு
ஊத்தை கழுவப் பற்றுமோ ஒன்ப தாறு.

பழங் கூழ் உண்ட உமக்குப் பாலுடன் சோறு
பயப்படா திரும் உமக்(கு)
ஆயுசு நூறு—மைத்துனரே...

எருமையும் நுழையும் உம(து)
இரு காதின் தொள்ளை
இனி, உமக்கு வச்சிரக்
கடுக்கன்கள் கொள்ளை

ஒரு வகையும் இல்லாமல்
உற்றீரே சள்ளை
ஊர் அதிபதிக் கிப்போது
உகந்தமாப் பிள்ளை—மைத்துனரே...

## பாடை ஏறினும் :

வேதநாயகம் இளமையை வீணாக்காமல் விளையாட்டிலும் வேடிக்கைகளிலும் பொழுதைப் போக்காமல், அல்லும் பகலும் கல்வியிலே கருத்தூன்றி நின்றார். தமிழிலும் ஆங்கிலத்தும் அமைந்த அரிய நூல்களை ஆராய்ந்தார். கற்கக் கசடறக் கற்பவை என்பதற் கேற்ப, கற்கத் தகுந்த நூல்களை ஐயந்திரிபறக் கற்றார். கற்றதைச் சிந்தித்தார், சிந்தனையால் அறிவு தெளிந்தார். 'பாடை ஏறினும் ஏடது கைவிடேல்' என்பது பழமொழி. பிற்காலத்திலே பெரும் புலவராய்ப் பிரசித்தி பெற்றும், சாகும் வரை இவர் படித்துக் கொண்டே இருந்தார்.

பிரதாப முதலியார் மூலம் பேசுகிறார் : 'ஒரு நாள் ஆசிரியர் என்னை நோக்கி, 'ஆசான் மாணவனுக்கு எவ்வளவு கற்பிக்கலாமோ அவ்வளவு நான் உனக்குக் கற்பித்து விட்டேன். இனி நீயே படித்துக் கல்வியில் நிரம்ப வேண்டும். ஆசானுடைய போதகம் முடிந்த

வுடன், கல்வியும் முடிந்து போனதாகச் சிலர் நினைக் கிறார்கள். அப்படி எண்ணுவது தப்பு. உண்மையைச் சொல்ல வேண்டுமானால், பாடசாலையை விட்ட பிற்பாடு தான் படிப்பு ஆரம்பிக்கின்றது. 'பள்ளிக் கணக்கு புள்ளிக்கு உதவா' என்பது போல, பள்ளிக் கூடத்திலே படிக்கிற படிப்பை வளர்க்கா விட்டால் அந்தப் படிப்பு ஒன்றுக்கும் உதவாது. பாடசாலையிலே படிக்கிற படிப்பு அத்திவாரமாகவும், பாடசாலையை விட்ட பிற்பாடு, தானே படிக்கிற படிப்பு மேற்கட்டிடத் துக்குச் சமானமாயும் இருக்கின்றது. ஒருருக்குப் போகிற மார்க்கத்தைக் காட்டுவது போல, கல்வி கற்க வேண்டிய வழியைமட்டும் ஆசிரியர் போதிப்பதே அல் லாது, கல்வியைப் பூரணமாய்க் கற்பிப்பது சாத்தியம் அல்ல . . . . பூட்டி வைத்திருக்கிற பொக்கி சத்துக்குத் திறவு கோல் கொடுப்பது போல, எந்தப் புத்தகத்தை வாசித்தாலும், பொருள் தெரிந்து கொள் ளும்படியான ஞானத்தை உனக்குப் போதித்து, வித்தியா பொக்கிசத்தின் திறவுகோலை உன்கையிலே கொடுத்து விட்டேன். இனிமேல், நீ, உன்னுடைய முயற்சியால் அதைத் திறந்து, அனுபவிக்கவேண்டுமே அல்லாது, நான் செய்யத் தக்கது ஒன்றுமே இல்லை. அரும் பதங்களுக்கு அருத்தம் தெரிய வேண்டுமானால் அகராதி நிகண்டுகள் இருக்கின்றன. திருவள்ளுவர் கம்பர் முதலிய மகா வித்துவான்கள் தங்களுடைய சுய

முயற்சியால் கவி சிரேட்டர்கள் ஆனுர்களே தவிர ஆசிரியர்களிடத்து அவர்கள் கற்றுக் கொண்டது அற்பமாகவே இருக்கும். அந்த வித்துவான்கள் எல்லோரும் மானிடப் பிறப்பே அல்லாமல் தெய்விகம் அல்லவே ? அவர்களைப் போல நீயும் முயன்று கல்வி பயின்ருல், அவர்களுக்குச் சமானம் ஆவதற்கு ஆதங்கம் என்ன ?

பள்ளிக்கூடங்களிலே பயிற்சியை முடித்து வெளி யேறுகிறவர்களுக்கு எத்தகைய அறிவுரை இது! நம்மவர் பெரும்பாலும் பத்திரிகைகளைப் புரட்டுவதே அன்றிப் புத்தகங்களைத் தொடவும் தற்போது கூசுகின் ருர்கள். பத்து வருடம் பதினைந்து வருடம் கல்லூரி களிலே பயின்றும் பரீட்சைகள் பலவற்றுக்குப் படித்தும், படிப்பது ஒரு பழக்கமாக நம்மவர்க்குப் பிடி படவில்லை. படித்தனவும் உடலிலே ஒட்டவில்லை; உள்ளத்தில் ஊறவில்லை. கலாசாலைகளுடன் கல்வியும் முடிந்ததாகவே அவர்கள் கருதுகிருர்கள். ‘கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது உலகளவு’ என்பதை அவர்கள் எண்ணுவதில்லை. இருபதாவது வயதிலே எய்திய பி. ஏ. அளவிலேயே அவர்கள் அமைந்து விடுகிருர்கள். கல்வியிலே இவர்கள் வளர்ச்சி எய்துவது இல்லை; இது வருந்தத்தக்கதே.

**நாத்திக நடத்தை :**

சென்ற நூற்றுண்டின் இடையிலே ஐரோப்பிய நாடுகளில் தோன்றிய அறிஞர் சிலர் பகுத்தறிவென்று பழுத்த நாத்திகத்தைப் பரப்பி வந்தனர். இவர்களிலே முக்கியமானவர்கள் : *டார்வின், அக்சிலி, பென்சர், டிண்டால். ஆங்கில மொழியிலே அறிவுக் கதிரான நூல்கள் எண்ணில அமைந்து கிடந்தாலும் ஆங்கிலம் பயின்ற தமிழர் சிலரும் இந்த வேத விரோதிகள் எழுதிய நூல்களையே விரும்பிப் படித்தார்கள். அதனுல் கடவுள் இல்லை; பாவ புண்ணியம் இல்லை; உலக சுகமே சுகம் என்ற உலகாயத எண்ணங்கள், பக்திக்கு வளர்ப்புப் பண்ணை ஆகிய தமிழ் நிலத்திலும் தலை எடுத்தது. மேலே கண்ட பகுத்தறிவு வாதிகள் உலகுக்கு ஒரு மதம் அவசியந்தான் ; சமய வுணர்வு இல்லாவிடின் ஒழுக்கம் கெடும் என்று ஒப்புக் கொண்டார்கள். காலின் என்பவர் ஒரு நாத்திகர். அவர் தம்முடைய வேலைக்காரர் தம்மைக் கொலை செய்யாமலும் தமது மனையில் களவு செய்யாமலும் இருக்க வேண்டுமே என்பதற்காக அவர்களைக் கோயிலுக்குப் போகும்படி வற்புறுத்தினுர். அக்சிலி என்பவர் மற்றொரு நாத்திகர் ; பள்ளிக்கூடங்களிலே

Darwin, Huxley, Spencer, Tindal.
Collin.

விவிலிய வேதத்தைப் பயிற்றுவிக்க இவர் முன் வந்தார். சமய விரோதி என்று தம்மைச் சொன்ஞல் டிண்டால் சண்டைக்கு வருவார். இவ்வாறு இவர்கள் சொல் ஒரு விதமாகவும் செயல் வேறு விதமாகவும் இருந்தது. ஆனுல் இவர்களைப் பரம குருவாகக் கொண்ட நம்மவர் நாத்திகத்திலே நாத்தடித்து நின்ருர். நாகரிகம் என்று ஆங்கிலர் நடையுடை பாவனைகளை அனுசரித்தனர். கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற கொள்கையில் முனைந்து நின்றனர். இவர்களுக்கு மாருக வேதநாயகம் 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' என்று கடவுள் பக்தியோடு சமய வுணர்வும் உடையராய் ஓதிய நெறியிலே நின்று ஒழுக்கத்திலும் உயர்ந்தார்.

கல்வியின் பயன் என்ன ? வேதநாயகம் கூறும் விடை இது. கல்வியின் பயன் கடவுளை அறிவது தான். சகல சாத்திரங்களும் வேதங்களும் சமய கோடிகளும் சொல்லுவ தெல்லாம் கடவுளே அல்லாமல் வேறல்ல. கல்விமானுக்குத் தெய்வபக்தியே சிறந்த பூடணம்.

'ஒவ்வொரு நிமிடமும் கடவுளிடத்திலே நாம் பெற்றுக் கொள்ளுகிற உபகாரங்களுக்குக் கணக் குண்டா ? நாம் உண்பது அவருடைய அன்னம்; உடுப்பது அவருடைய வஸ்திரம்; குடிப்பது அவருடைய சலம்; நாம் வசிப்பது அவருடைய வீடு;

சஞ்சரிப்பது அவருடைய பூமி; நாம் சுவாசிப்பது அவருடைய சுவாசம் ; நாம் காண்பது அவருடைய பிரகாசம் ; நாம் அனுபவிப்பது அவருடைய சுகம். இந்த சகல சுகங்களை அனுபவிக்கிற நமது தேகமும் பஞ்சேந்திரியங்களும் ஆத்மாவும் அவருடைய கொடை. அவருடைய கிருபை இல்லாவிட்டால் ஒரு நிமிடம் நாம் சீவிக்கக் கூடுமா? அவர் நம்மை அசைக்காமல் நாம் அசையக் கூடுமா ? அவர் நம்மை நடப்பிக்கா விட்டால், நாம் நடக்கக் கூடுமா? பூமியைப் பார்த்தாலும், ஆகாசத்தைப் பார்த்தாலும் எங்கே பார்த்தாலும், அவருடைய உபகார மயமே அன்றி வேறுண்டா ? ஆகாயம் நம்மை சூழ்ந் திருப்பது போல, அவருடைய உபகாரங்கள் நம்மைச் சூழ்ந்திருக்கின்றன. சமுத்திரத்திலே பிறந்து சமுத்தி ரத்திலே வளர்ந்து, சமுத்திரத்திலே சீவிக்கிற மீன்கள் போலக் கடவுளது கிருபா சமுத்திரத்துக் குள்ளாகவே நாம் சனித்து வளர்ந்து சீவிக்கிறோம்.'

## உத்தியோக சங்கடம் :

வேதநாயகத்துக்கு வயது 22. இவருடைய புலமைப் பெருக்கையும் புத்தி கூர்மையையும் தெரிந்த மேஸ்தர் கார்டன் 1848-ல் இவரைத் தமது கோர்ட்டிலே பத்திரப் பாது காவலராக * நியமித்தார். கார்டன் பிரின்சிபல் சதிரமீனுய்த் திருச்சிராப்பள்ளியிலே இருந்தார்.

1850-ல் திருச்சிராப்பள்ளி சில்லாக் கோர்ட்டிலே மொழி பெயர்ப்பு வேலை காலி விழுந்தது. பத்திரப் பாது காவலரான வேதநாயகம் அந்த வேலைக்கு விண்ணப்பம் செய்து கொண்டார்; வேறு சிலரும் மனுச் செய்திருந்தார்கள். மேஸ்தர் பாய்லோ சில்லா நீதிபதி. அவர் மிகவும் நேர்மையானவர். எல்லோரையும் அவர் பரீட்சை செய்து நமது கலை வல்லோரைத் தேர்ந்தெடுத்தார். மொழி பெயர்ப்பாளராக வேதநாயகம் தமது முயற்சியால் முதன்மை பெற்றார்; அதனுல் நீதிபதிகள் பலருடைய அன்புக்குப் பாத்திரம் ஆனர்.

சில்லாக் கோர்ட்டிலே மொழி பெயர்ப்பு வேலை மிகுதியாய் இருந்தது. தமிழிலே உள்ளதை ஆங் கிலத்தும் ஆங்கிலத் தமைந்ததைத் தமிழிலும் மொழி பெயர்க்கும் போது பொருள் பெயரக் கூடாது

---

* Record keeper

அல்லவா ? கோர்ட்டு விவகாரம் ஆயிற்றே. நூறு வருடத்துக்குப் பிறகு, ஆங்கில அறிவும் தமிழறிவும் மிகுந்த தற்போது, வெளியாகும் மொழி பெயர்ப்புக்கள் பலவும் மோசமாய் இருக்கின்றன ; விசித்திரமாய் இருக்கின்றன. கலாசாலை கல்லூரிகளிலே மொழி பெயர்ப்பு இன்று கட்டாயப் பயிற்சி. எந்தவிதப் பயிற்சி யும் இன்றி, வேதநாயகம் சிக்கலான தீர்ப்புக்களாலு லும், சட்ட நுணுக்கங்கள் ஆனாலும், மூலத்துக்கிசைய மொழி பெயர்ப்பார் ; மொழி பெயர்ப்பு எளிதாகவும் இனியதாகவும் இருக்கும். பிற்காலத்திலே பிரதாப முதலியார் சரித்திரத்தை, எழுதித்தமிழ் வசன நடைக்கு இவர் வழி காட்டினார் அல்லவா ? அதற்குரிய பயிற் சியை இந்த மொழி பெயர்ப்பால் இவர் அடைந்தார்.

சிவில் கிரிமினல் சட்டங்கள் தமிழ் நாட்டுக்குப் புதியவையே. மனுநீதி போன்ற பழைய நூல்களி னின்றும் சிவில் கிரிமினல் விவகாரம் பற்றிய சரத் துக்கள் சென்ற தலை முறையிலே தொகுக்கப்பட்டு வரையறை செய்யப்பட்டன. இவற்றை அமுல் நடத்த நீதி மன்றங்கள் சிறைக் கோட்டங்கள் எழுந்தன ; அதனாலே அவற்றை வாதிப்பதற்கு வழக்கறிஞர்கள் தோன்றினார்கள். சட்டங்களின் திட்ப நுட்பங்களையும் சிக்கலான தீர்ப்புக்களையும் பொது மக்கள் அறிவது எத்துணை அவசியம்? அதனால், மொழிபெயர்ப்பாளரான வேதநாயகம் அவற்றைத் தமிழிலே பெயர்த் தெழுதி

வெளியிட்டார். 1805 முதல் 1861 வரை, இலை மறை காய் போல ஆங்கில மொழியிலமைந்த சதர்க் கோர்ட்டு முடிவுகளைத் திரட்டி, மொழி பெயர்த்து 1862-ல் சித்தாந்த சங்கிரகம் என்ற பெயரிலே வெளி யிட்டார். ஆங்கிலம் அறிந்த வழக்கறிஞர் அக்காலம் அருமை அல்லவா ?ஆதலின் வழக்காளர் பலருக்கும் அது பெரும் செல்வமாய்ப் பயன்பட்டது. 1862, 1863ம் வருடங்களின் ஐக்கோர்ட்டுத் தீர்ப்புக்களைத் தமிழ்ப் படுத்தி, 1864-ல் அதை வெளியிட்டார். இவைதான் சட்ட நுணுக்கங்களைப் பற்றித் தமிழிலே அமைந்த ஆதிநூல்கள் : இதன் பின் வேறெதுவும் இதுவரை வெளியானதாகத் தெரியவில்லை; அவையும் தற்போது கிடைக்கவில்லை.

## ஏடுகிழிதல் :

கோர்ட்டிலே மொழி பெயர்ப்புக்கு வரும் பத்திரங்கள் மலைபோலக் குவிந்து கிடக்கும்; ஓய்வின்றி வேதநாயகம் உழைப்பார்; என்றாலும், வேலை முடியாது. தமக்குத் துணையாகச் சொந்தத்திலே சம்பளந் தந்து எழுத்தாளன் ஒருவனை அமர்த்தினார். மொழி பெயர்த்து இவர் சொல்ல அவன் எழுதி வருவான். பகல் முழுவதும் கோர்ட்டிலே பணியாற்றி, வீட்டுக்கு வந்த பின்பு, இரவிலே நெடுநேரம் நூல்களைப் படிப்பார் ; படிப்பதைக் கேட்பார். ஒழிவு நேரங்களிலே ஆங்கில மொழியைப் பலருக்கும் கற்பித்து வந்தார்.

சில்லாக் கோர்ட்டிலே குற்ற வழக்குகள் விசாரணை ஆகும்போது, நீதிபதியின் அருகில் அமர்ந்து, காசியார் பத்துவாக் கொடுப்பது அக் கால வழக்கம். முஸ்லிம் ஆட்சி முன்னம் நிலவிய போது காசியார் நீதி வழங்கினர்; ஆட்சி கை மாறிய ஆரம்ப காலத்திலும் முன்னைய வழக்கம் போலவே, ஆங்கில நீதிபதிகள் அருகே காசியார் அமர்ந்து, நியாய வழக்கிலே உதவி புரிந்தார். நீதிபதியின் கருத்துடன் காசியார் மாறுபட்டால், அத்தகைய வழக்குகளை ஆங்கிலத்து மொழி பெயர்த்து, சதர்க் கோர்ட்டார் முடிவுக்கு அனுப்ப வேண்டும். இது அந்த நாள் முறைமை. வேதநாயகம் மொழி பெயர்ப்பு வேலையை முட்டின்றி நடத்தி வந்தபோது, இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே கலகம் உண்டாகிப், பல வழக்குகள் சில்லாக் கோர்ட்டிலே நடந்து வந்தன. வழக்குகள் பலவற்றிலும் நீதிபதியின் கருத்துக்குக் காசியார் கருத்து மாறுபட்டிருந்தது. அதனால், அவற்றைச் சதர்க் கோர்ட்டாரிடம் சமர்ப்பிப்பதற்காகச் சகல நடவடிக்கைகளையும் ஆங்கிலத்திலே மொழி பெயர்த்து, நீதிபதியின் கையொப்பத்திற்கு வேத நாயகம் வைத்தார். அவ்வமயம் நீதிபதியாய் விளங்கி யவர் மேஸ்தர் டேவிட்சன்; அவர் வேறு சில்லாவுக்கு மாற்றப்பட்டார். அதனால், மொழி பெயர்ப்புக்களைப் பார்வையிட அப்போது அவரால் முடிய வில்லை; சாவ

காசமாகப் பார்த்துக் கையொப்பம் வைப்பதாக அவற்றை அவர் தம்முடன் எடுத்துச் சென்ருர். சென்ற இடத்திலே நோய் கண்டு அவர் இறந்து போனுர்.

சதர்க் கோர்ட்டார், தங்களுக் கனுப்பப் பட்டிருக்கிற கலக வழக்குகளேப் பரிசோதித்து, அவற்றுக்குரிய மொழி பெயர்ப்புக்களேக் காலங் கடந்தும் ஏன் அனுப்பவில்லே? அது யார் தவறு? என்று சில்லாக் கோர்ட்டாரைக் கேட்டார்கள். அவ்வமயம் சில்லா நீதிபதியாய் வந்தவர் மேஸ்தர் கிரீன்வே. அவர் கொடிய குணம் படைத்தவர்; முன் கோபக்காரர், நடந்த சங்கதிகளே அவர் விசாரியாமலே, அது வேதநாயகத்தின் பிசகென்றும், அதற்காக அவர் வே லே யி னி ன் று ம் விலக்கப்பட்டதாகவும், சதர்க் கோர்ட்டுக்கு எழுதி விட்டார். நடந்த விருத்தாந்தங்களே விவரமாய் வேதநாயகம் எழுதி, சதர்க் கோர்ட்டுக்குத் தமது தண்டனேயை ரத்து செய்யுமாறு விண்ணப்பித்துக் கொண்டார்; பல மாதங்கள் கழிந்தும், அவர் விண்ணப்பம் கவனிக்கப் படவில்லே.

### பட்ட காலிலே படும் :

இடிமேல் இடி என்பார்களே, அதுபோல வேலே இழந்த வி ச ன த் து ட ன் வேதநாயகத்தைப் பல துயரங்கள் பீடித்தன. குத்திருமல் என்ற கொடிய நோய் பற்றியது. ஒரு நாளிரவு படுக்கையிலே அவரைச்

சிறுபாம்பு தீண்டியது. சவாரி போகும் போது ஒரு நாள் வண்டி குடை கவிழ்ந்தது. இடறின காலே இடறும் ; துன்பத்தின் மேல் துன்பமாக அவரைப் பல தொல்லேகள் சூழ்ந்தன. இத்துயரங்களே யெல்லாம் அவர் கடவுளே நினேந்து துதித்தும், பாடியும் பொறுமை யுடன் சகித்து வந்தார். 'துன்பமே ஞானத்தின் பாட சாலே ; துன்பப்படாதவன் யோக்கியன் ஆக மாட்டான்' என்பது, வேதநாயகர் சித்தாந்தம்.

## அடாது செய்தால் :

இவருடைய தந்தை முந்தியே காலஞ் சென்று விட்டார். தாயார் மிகுந்த புண்ணியவதி, தெய்வபக்தி வாய்ந்தவர். ஞானப்பூ அம்மாள் என்ெருரு தங்கை இவருக்கு இருந்தார். இந்த அம்மை கற்புக் கணிகலம், கன்னியர்க் கரசி ; பொறுமைக் குறைவிடம் என்று புகழப் பெற்ருர். இவர்களுடைய இடைவிடாத பிரார்த் தனேயாலும் செபத்தாலும், தேவதாயின் அருளாலும், வேதநாயகம் பிள்ளேக்கு மீண்டும் நல்லகாலம் தோன்றத் தொடங்கியது.

வேதநாயகம் மீண்டும் சதர்க் கோர்ட்டுக்கு விண்ணப்பம் செய்தார். அவ்வமயம், காலஞ் சென்ற டேவிட்சனுடைய பெட்டியிலிருந்து முன்னம் காணுமற் போன மொழிபெயர்ப்புக்கள் வெளியாயின. இதனே ஆராய்ந்த சதர்க் கோர்ட்டார், வேதநாயகத்துக்கு வேலே

கொடுக்குமாறு கட்டளை இட்டார்கள். அப்போது வேதநாயகத்துக்குப் பதிலாக வேலையிலிருந்தவன் ஒரு கிழக்கிந்தியன். அவனோ, சில்லா நீதிபதி சுவிண்டனுக்கு மிகவும் வேண்டியவன். அதனால், சுவிண்டன் வேதநாயகத்தை வேலைக் கெடுக்க மனம்இன்றி, சதர்க் கோர்ட்டாருக்கு இல்லாததும் பொல்லாததும் கற்பித்தெழுதினான். வேதநாயகம் நோயாளி; வேலைக்குத் தகாதவர்; மேலும் தாமாக அவர் மொழிபெயர்ப்பதில்லை வேறு ஒருவனைக் கொண்டு அவர் வேலை செய்விக்கிறார் -இவை அவன் கற்பித்த குற்றச் சாட்டுகள். இவற்றுக்குத் தகுந்த சமாதானங்களையும் காரணங்களையும் விளக்கி, வேதநாயகம் சதர்க் கோர்ட்டாரிடம் மனுக் கொடுத்தார். இதனை ஆராய்ந்த சதர்க் கோர்ட்டார், வேதநாயகத்துக்கு அனுகூலமாகத் தீர்ப்புக் கூறவே, நீதிபதி சுவிண்டன் பிடிவாதமாகப், பொய்யாய்ப் புனைந்து 'வேதநாயகம் மிகவும் நோயாய்க் கிடப்பதால், மறு உத்திரவு வரும் வரையில் அவர் உயிருடன் இருப்பாரா என்பதே சந்தேகத்துக்கிடம்' என்று சதர்க் கோர்ட்டுக்கு எழுதினான். இவனுடைய வரம்பு மீறிய செய்கையைக் கண்டித்துச் சதர்க் கோர்ட்டார் எச்சரிக்கை செய்தார்கள். சுவிண்டனும் விடுமுறை பெற்று, லண்டனுக்குப் பயணம் ஆனான். வழியிலே, பாவம்! சீதபேதிகண்டு இறந்துபோனான். இவனுக்குப் பின் நீதிபதியாய் வந்த மேஸ்தர் ஆரிஸ் வேதநாயகத்

துக்கு வேலைகொடுத்து மிகுந்த அன்புடன் அவரை நடத்தினர்.

ஈனத்திலே பிறந்தோன் இறையாய் வரின்,
என்றும் மது
பானத்திலே, பரி தானத்திலே, கை
பழகி, அவ
மானத்திலே மிகுந் தோர்க் கதிகாரம்
வழங்கிடுவன்;
ஞானத்திலே சிறந்தோரை எல்லாம் தள்ளி
நை விப்பனே

என்ற, வேதநாயகம் தமது சொந்த அனுபவத்தைத் தான் இவ்வாறு பாடினர் என்று அறிகிரேம் அல்லவா ?

வேலை இழந்த வேதனையிலே வேதநாயகம் எழுதிய இசைப் பாடலின் ஒரு பகுதி பின் வருமாறு :

எரிகிற வீட்டிலே பிடுங்குவது லாபம்
என்று சொல்வார் அந்தவண்ணமே
பெரிய கோள் சொல்லிநம் உத்தியோகத்தைப்
பிடுங்கு வதில் எண்ணமே
சரி இவர் எண்ணம் முடிக்கட்டும்—லஞ்சம்
சர்வ கொள்ளைகள் அடிக்கட்டும்—உண்மை
துரை மகன் கண்டு பிடிக்கட்டும்—அந்தத்
துட்டரை டசன் அடிக்கட்டும்—பெண்ணே
எந்நாளிலும் தர்மமே செயம்
ஏன் மயங்குகிருய் பெண்ணே.

மாயூரம் முனிசீப் :

1856-ம் வருடத்திலே முனிசீப் வேலை காலி வீழ்ந்தது. வேதநாயகம் அதற்கு மனுச் செய்தார். மனுதாரர்களைப் பரிசோதிப்பதற்காக ஒரு பரீட்சை நடத்தப்பட்டது. கும்பகோணம் சில்லா நீதிபதி பீச்சாம்பு, பரீட்சை அதிகாரியாக நியமிக்கப்பட்டார். அறுபதுக்கு மேற்பட்ட விண்ணப்பதாரர்களைப் பரி சோதித்து அவர், வேலைக்குத் தகுந்தவர் என்று மூவரைத் தேர்ந்தெடுத்தார். அவர்களிலே ஒருவர் வேதநாயகம் பிள்ளை; மற்றவர்கள் ஜஸ்டிஸ் முத்துசாமி ஐயரும் திவான் ரகுநாதராவும். வேதநாயகம் முனிசீப் பானார் ; எஞ்சிய இருவரும் பிற்காலத்தில் பெரும் பதவிகளைப் பெற்றுப் பிரசித்தி அடைந்தார்கள் என்றாலும், அவர்கள் முனிசீப் வேதநாயகம் போல இறவாப் புகழ் எய்தினவர்கள் அல்லர்.

தேடிச் சோறு நிதந் தின்று-பல
சின்னஞ் சிறு கதைகள் பேசி-மனம்
வாடித் துன்பம் மிகவுழன்று-பிறர்
வாடப் பல செயல்கள் செய்து,-நரை
கூடிக் கிழப்பருவம் எய்தி—கொடுங்
கூற்றுக் கிரை எனப் பின்மாயும்-பல
வேடிக்கை மனிதரைப் போன்றவர்
அல்ல வேதநாயகம்.

1857-ல் தரங்கம்பாடியிலே வேதநாயகம் முனிசீபாக நியமனம் பெற்ருர். தரங்கம்பாடியும் அதனைச் சூழ்ந்த பிரதேசமும் சமீப காலத்திலேதான் ஆங்கிலர் வசமாயின. அதற்கு முன் அது 200-வருடம் டேனிஷ்காரர் ஆளுகையில் அமைந்திருந்தது. சிறந்த வியாபாரத் தலமாகத் திகழ்ந்தது. இன்று சீரிழந்த சிறு கிராமமாகக் காட்சி அளிக்கிறது.

வேதநாயகம் பிள்ளை உத்தம நீதிபதியாய் உயர்ந் தார்; நேர்மை தவருத நியாயாதிபதி என்று பெயர் வாங்கினுர். விழுமிய ஒழுக்க சீலராக மேம்பட்டார். அதனுலே, சில்லா நீதிபதியாக வந்த ஆங்கிலர் பலரும் இவரிடம் மதிப்பும் மரியாதையும் கொண்டார் கள். சப் ஜட்ஜ் வேலைக்குத் தகுந்தவர் என்று சிபா ரிசும் செய்யப் பட்டார். மாயூரம் முனிசீபிடம் நியாயம் கிடைக்கும் என்ற உணர்ச்சி எங்கும் பரவியது. மற்ற கோர்ட்டுகளிலே உள்ள வழக்குகளை மாயூரம் கோர்ட்டுக்கு மாற்றும்படி, சில்லாக் கோர்ட் டுக்கு வரும் மனுக்களுக்குக் கணக்கே இல்லை. அதனுல், பலருடைய பொருமைக்கு இவர் ஆளானுர்.

இவருடைய கச்சேரி வாசலிலே குதூகலமாய் மக்கள் கூடி நின்று விவகாரங்களின் நடைமுறைகளைக் கவனிப்பார்களாம். 'ஏழைக்கிரங்கிடும் நல் வேதநாயகர் எப்போ வருவாரோ கச்சேரிக்கு' என்பது அக்காலம் நாடோடியாய் வழங்கிய பாடலின் ஒரு பகுதி; எஞ்சியவை கிடைக்கவில்லை.

1872-ல் நெல்சன் என்பவர் சில்லா நீதிபதியாக வந்தார். வந்த மேலதிகாரியை வேதநாயகம் சென்று தரிசிக்கவில்லை. தம்முடைய தகுதி தரங்களை மேலதி காரிகள் அறிந்து மதித்த பின் அன்றி, இவர் அவர் களைச் சந்திப்பதில்லை. இவர்மீது பொறுமை கொண்ட சிலர், கோள் சொல்லித் தூண்டியதாலோ, தம்மை வந்து சந்திக்கவில்லை என்ற மனத்தாபத்தாலோ, நெல்சன், மாயூரம் கோர்ட்டைப் பரிசோதனை செய்ய முன்னறிவிப் பின்றி வந்து சேர்ந்தார். அப்போது வேதநாயகம் பிள்ளைக்கு உடல் நலம் சீர்கெட்டிருந்தது. சிப்பந்திகள் செய்துவந்த வேலையைச் சரிபார்க்க அவரால் இயலவில்லை. அதனால், கோர்ட்டு நடவடிக் கைகளிலே, குறைபாடுகளைத் தேடிப்பிடிக்க நெல்சனால் முடிந்தது. தம்முடைய தலைமை யிடத்துக்குத் திரும்பிய நெல்சன், குறைகளுக்குச் சமாதானங் கூறும்படி, வேதநாயகம் பிள்ளைக்கு உத்திரவு அனுப்பினார். தகுந்த முகாந்திரங் கூறப்பட்டும் நெல்சன், நேரிலே விசாரிக்க வேண்டும் என்று வேதநாயகம் பிள்ளையைச் சிப்பந்தி களுடன் சில்லாக் கோர்ட்டுக்குப் புறப்பட்டு வரும்படி கட்டளை இட்டார். உடல்நலம் காரணமாக வேதநாயகம் பிள்ளை, பிரயாணம் செய்யக் கூடாதவராய்த் தமது சிப் பந்திகளை மட்டும் அனுப்பி வைத்தார். நெல்சனுடைய ஆத்திரத்தை இது கிளறியது. அதனால், அவரும் முனிசீபே நேரில் வரவேண்டும் என்று வற்புறுத்தவே வேதநாயகம், தாம் நோயாய் இருப்பதாக மருத்துவ

ரிடம் சான்று வாங்கி, அதை அனுப்பினுர். அதனுல், ஆவேசமடைந்த நெல்சன், வேதநாயகம் மீது பல குற்றங்களைச் சுமத்தி, வேலையினின்றும் அவரை நீக்கு மாறு ஐகோர்ட்டுக்குச் சிபாரிசுசெய்தார். அதன்படியே உத்திரவு பிறந்தது. அதன்மீது தகுந்த சமாதானங் காட்டி, வேதநாயகம் ஐகோர்ட்டுக்கு மனுச் செய்து கொண்டார். ஐக்கோர்ட்டார் எல்லா விவரங்களையும் ஆராய்ந்து, மேலதிகாரிக்குக் கீழ்ப்படியாமை ஒன்றே வேதநாயகத்தின் குற்றம் என்று தீர்ப்புக் கூறி ' பென்சன் ' பெற்று வேலையினின்றும் ஓய்வு கொள்ளு மாறு அவரை வற்புறுத்தினர். உடல் நலம் சீர்கெட் டிருந்ததால் வேதநாயகமும் அதற்குச் சம்மதித்தார். நெல்சனே இத்துடன் நின்ருன் இல்லை. பென்சனைத் தடுக்கவும் பெருமுயற்சி செய்தான். ஐகோர்ட்டார் நெல்சனுடைய ஆட்சேபங்களைப் புறக்கணித்து வேதநாயகத்துக்கு மாதம் நூறு ரூபாய் ' பென்சன் ' கிடைக்குமாறு செய்தார்கள்.

' உலகிலே தங்களுக்குரிய வீடுகளை விற்பவர் களைப் பொருள்களை விற்பவர்களைக் கண்டிருக் கின்ருேம். அவற்றை அவர்கள் வறுமையால் விற்கிருர்கள் ; அல்லது, வேறுகாரணங்களால் விற்கிருர்கள். ஆனுல், பொன் போலப் போற்றி வளர்த்த சரீரத்தை விலை கூறுபவர் யார் ? அவர்தான் உத்தியோகத்தர். ஒரு சாண் வயிறு காரணமாக எண்

சாண் உடலை ஆளவந்தார்க்கு நாமும் அடிமைப் படுத்தினேமே. அந்த அடிமைமுறி கிழிந்தது ; நாமும் விடுதலை பெற்றேம் ; அதனுல் சிறை நீங்கினேம் ; சிறுமை நீங்கினேம்' என்று வேலையினின்றும் விலகிய போது வேதநாயகம் மகிழ்ந்தார் ; அந்த மகிழ்ச்சிப் பெருக்கைப் பாருங்கள்:

வீடு நிலங்கள் பொருளை விற்பார் இந்த மேதினியில்
நீடும்எண் சாண் மெய்யை ஓர்சாண் உதரம் நிமித்தம் விற்று
நாடும் அரசர்க் கடிமை என்றே முன்பு நாம் கொடுத்த
ஏடு கிழிபட்டதன்றே உத்தியோகம் இழந்ததுவே.

தறை நீங்கின உத்தியோகத்தைக் கைவிட்ட தன்மையினுல்,
சிறை நீங்கினம் ; பல தீயர்க் குள் ளாகிச் சிறுமையுறும்
குறை நீங்கினம்; துட்டர் கூட்டமும் நீங்கினம்; கூடுந் துன்பப்
பொறை நீங்கினம்; நங்கறை நீங்கினம்; மகிழ் பூன் நெஞ்சமே.

உத்தியோகத்தினின்றும் ஓய்வடைந்ததால் வேத நாயகம் மிகவும் ம கி ழ் ந் த ா ர். உத்தியோகசாலை கரும்பாலை, அதிலே அகப்படுபவர்கள் கரும்பைப் போலப் பிழியப்படுகிறுர்கள் அல்லவா ? ஆதலின், 'போதும் போதும் உத்தியோக கனமே' என்று ஒதுங்கின அவருடைய எக்களிப்பைத் திரிபுடை தாளத்திலே அ மை ம த் து ப், புன்னுகவராளியிலே பாடினுர். அவற்றிலே சில வரிகள் :

போதும் போதும் உத்தியோக கனமே—இதில்
ஏது சுகம் நமக்கு மனமே.

★ ★ ★ ★ ★ ★

எந்த நேரமும் ஓயா வேலே—இதில்
என்ன பெற்ருேம் முத்து மாலே ;

அந்த உத்தியோகமும் ஆலே—அதில்
அகப்பட்ட நாம் கரும்பு போலே—போதும்

உத்தியோகத்திலே இருந்த போதும் அவர் மனம் ஓய்வை நாடித் தவித்தது ; உலக மோசடிகளேயும் பொய் புரட்டுகளேயும் ஆராய்ந்து சலித்த அவர் மனம் அமைதியை நாடியது ; ஆதலின், அவர் ஏங்குகிருர் ?

அப்பா இதென்ன அதிகாரம்—ஐயோ
எப்போதும் பக்தி செய்ய இல்லேயே நேரம்,

என்று ; ஏனென்ருல்,

சுப்பையரோ அபத்த மூட்டை—அந்தச்
சுந்தரையர் வழக்கிலே தொள்ளாயிரம் ஓட்டை ;

அப்பையர் கற்பிப்பார் பொய்ச் சீட்டை—அந்த
அனந்தையர் கட்டுவார் ஆகாசக் கோட்டை.

அண்டப் புரட்டன் அந்த வாதி—அகி
லாண்டப் புரட்டன் அப்பா அவன் பிரதிவாதி ;

சண்டப் பிரசண்டன் நியாயவாதி—நாளும்
சாஸ்திரப் புளுகன் கட்சிக்காரன் எனும் கியாதி.

ஆதலின்,

போதும் போதும் உத்தியோக கனமே—இதில்
ஏது சுகம் நமக்கு மனமே.

என்று அவர் வினவியதிலே வியப்பில்லே ; மேலும் அவர் கேட்கிருர்.

இந்த வழக்குக் கெல்லாம் நாம்தாஞ! கோர்ட்டில்
வந்தவன் எல்லாம் நமக் கெசமாஞ ?

நந்தன் வலியச் சண்டை பிடித்தாலும்—அந்த
நாகனேத் திட்டி அவன் அடித்தாலும்.

அண்ணன் தம்பிகளை வெறுத்தானும்—அவர்க்கு
ஆஸ்தி பாகங் கொடாமல் மறுத்தானும்.

கண்ணன் வயலைப் பொன்னன் அறுத்தானும்—கடைக்
காரன் கேட்ட சரக்கை நிறுத்தானும்.

ககனப்பூ வந்திமகன் கொய்தானும்-அதைக்
கண்டு குருடன் அம்பால் எய்தானும்.

செகமிசை ஊமையனும் வைதானும்-அதைச்
செவிடன் கேட்டு நகை செய்தானும்.

வழக்குகள் எப்படி ?—பொய்யும் புனை சுருட்டுமே. கட்சிக்காரர் எத்தகையர்? அண்டப்புரட்டர், ஆகாசப் புரட்டர்; சாட்சிகளோ மனச் சான்றில்லாதவர். ஆதலின், வேதநாயகம் வேண்டுகிறார்,

நானே பொதுநீதி தானே செலுத்திட
நல்லவரம் அருள் கோனே.

வரும் வழக்கர் மனத்தை
வன் சொற்களால் கெடாமல்
மற்றைக் கீழ் உத்தியோகஸ்தர்
வம்புக் கிடங் கொடாமல்

அரும்மடியால் வழக்கு
ஆராய்ச்சியில் பின்னிடாமல்
அப்பன் பாட்டன் சொன்னாலும்
அறநெறி கை விடாமல்

தரும தேவதை ஞாய
தலந்தனில் நடிக்க
தப்பு சாட்சிகள் கிடு
கிடெனவே துடிக்க

இருமையகல் அநீதியே
ஓட்டம் பிடிக்க
இலஞ்சம் வாங்கிகள்
வெட்கத்தால் உயிர் மடிக்க

நானே பொது நீதி தானே செலுத்திட
நல்லவரம் அருள் கோனே.

நீதி வழங்கலை நினைந்து, 19-ம் நூற்றுண்டிலே வேதநாயகம் இவ்வாறு விளம்பியது போலவே, கி. பி. மூன்றும் நூற்றுண்டில் சூத்திரகன் என்ற வேந்தன் மிருச்சகடிதத்திலே பேசுகிறுன். 'ஆ' நீதிபதிகள் வழக்கு நிலையின் வயப்பட்டு, அதன் சான்று முதலிய எவ்வாறுளவோ, அவ்வாறே முடிக்கற்பாலர்; தம்மறிவு மாத்திரையை கடைப் பிடித்து, வழக்கின் இயல்புகளைப் பகுத்தறிதல் அவர்க்கு அரிதாகின்றது.

வழக்குரைப்போர் வழக்கின் தன்மையை மறைத்துக் கூறுவர். எல்லோரும் தம்மைக் குற்றம் அற்றவர் என்றும், காரணம் இன்றியே பிறர் தீங்கிழைத்தனர் என்றும், தம் பிழையை மறைத்தே கூறுகின்றனர். வாதி பிரதிவாதிகள் இருவரும் தத்தம் பிழைகளை மறைத்துப் பிறர் பிழைகளை வெளிப்படுத்தற்குச் செய்கிற ஆரவாரங்களால் உண்மை புலனுகாமல் போகிறது. ஆதலின், நீதிபதி களுக்குப் பழிப்பு எளிது; புகழ்ச்சி அரிது.

ஒழுக்கம் உடையார் எனினும் சாட்சியாய் வருபவர், வெகுளியினுல் கண்டதை மறைத்துக், காணுதவற்றை ஏறிட்டு இயம்புகின்றனர்; தமது கட்சியின் தவறுகளை உரையார்; ஆதலின், அறங் காண்பவர்க்குப் பழிப்பு எளிது; புகழ்ச்சி அரிது.

நீதிபதிகளாய்ப் பதவி வகிப்பவர்க்கு அறநூல், பொருள்நூல் பற்றிய நுட்ப அறிவு அவசியம்;

அவர்க்கு வெகுளி கூடாது; அது அறிவைத் தடைப் படுத்தும். வஞ்சகர் மனத்தை ஊடுருவிப் பார்க்கும் ஆற்றல் அவர்க்கு இன்றியமையாதது. தாமறிந்த உண்மைகளைத் தயங்காது அவர் வெளியிடல் அவசியம். வாதி பிரதிவாதிகளின் முன்னை நிலைகளை நினையாமல், வழக்கின் தன்மையையே சான்று முதலியவைகளால் ஆராய்ந்து முடிவு செய்தல் அவர் கடன். உண்மையாக நிகழ்ந்த தொன்றை எடுத்தியம்பும் வலியிலாதவரைத் தாமே உண்மையுணர்ந்து பாதுகாத்தல் அவர் பொறுப்பு. வஞ்சகத்தை வெளிப்படுத்தித் தக்கவாறு தண்டனை விதிக்க அவர் தயங்கக் கூடாது.

தருமநெறியிலே தவருமை, பொருளாசை யின்மை, நண்பர் உறவினர் பகைவர்திறத்து நடு நிற்றல்-அவர் பண்பு. இவற்றுக் கெல்லாம் மேலாக நீதிபதியிடம் கடவுள் பக்தி கனிய வேண்டும்; அதனுலே, அறத்தைக் கடைப் பிடிப்பதிலே உறுதியும், மறத்தை ஒழிப்பதிலே துணிவும் உண்டாகும். சூத்திரகன் வகுத்த இந்த இலக்கணத்துக்கு வேதநாயகம் இலக்கியமாய் நின்ருர். முனிசீபாய் பதவி வகித்தகாலம் முழுவதும் இவர் செபத்துக்குரிய தா யிருந்த தியானமொழியின் ஒரு பகுதி கீழே வருவது; அதைப் பார்ப்பவர் வேதநாயகம் பிள்ளை, நியாயம் வழங்குவதிலே எத்தகைய உறுதியைக் கடைப் பிடித்தார் என்பதை அறியாமல் இரார்.

## நீதிபதிகளா? அநீதிபதிகளா?

மொழி பெயர்ப்பாளராகவும் முனிசீபாகவும் வேதநாயகம் பல்வேறு நீதிபதிகளின் கீழ் வேலைபார்த்தவர் அல்லவா? சென்ற தலைமுறையிலே நீதிபதிகள் எப்படி நடந்து கொண்டார்கள்? எவ்வாறு அவர்கள் நியாயம் வழங்கினார்கள்? என்ற விவரங்களை வேதநாயகமே விளக்கியிருக்கிறார். அதன் சுருக்கம் வருமாறு :

சில நியாயாதிபதிகள், நீதி மன்றத்துக்குப் போகிற நேரம் ஒரே தன்மையாய் இராது. ஒரு நாள் காலையிலும், ஒரு நாள் நடுப்பகலிலும் ஒரு நாள் மாலையிலும் செல்வது அவர்கள் வழக்கம். அதனால், கட்சிக்காரர்கள் எந்த நேரத்திலே தாங்கள் நீதி மன்றத்துக்குப் போவது என்று தெரியாமல், அவதிப்பட்டார்கள். நேற்றைய தினம் நீதிபதி காலையிலே வந்தபடியால், இன்றும் காலையிலே வருவார் என்று வழக்காளி காத்திருந்தால், அவரோ கட்சிக்காரர் இல்லாத சமயத்திலே தோன்றி, கட்சிக்காரர் ஆசராகவில்லை என்று வழக்கைத் தள்ளி வந்தார். ஆசராகுகிறவர்கள் வழக்கையோ விசாரிப்பதில்லை.

சில நீதிபதிகள் வியாச்சியத்தை விசாரிக்கும் சிரமத்தின் நிமித்தம், அதற்குப் பல தோடங்களைக் கற்பித்து, சருவசங்காரம் செய்து வந்தார்கள். வேறு

சிலர், வியாச்சியத்துக் காதாரமான சட்ட நுணுக்கங் களைத் தெரிந்து கொள்ளாமல், வக்கீல்கள் வாய்ப் பிறப்பை நம்பித் தீர்ப்புச் செய்வதும், வக்கீல்கள் நியாயத்தை நிரூபிக்க வில்லை என்று அநியாயத் தீர்ப்புச் செய்வதுமாய் இருந்தார்கள்.

சிலர் அட்டாவதானம் செய்வது போல, பல வியாச்சியங்களை ஒரே காலத்தில் விசாரிக்கத் தொடங்கி, எதையும் முடிக்காமல், திருப்பதிச் சவரம் போல அரையுங் குறையுமாய்த் தீர்த்து வந்தார்கள். மேலும் அவர்கள் விசாரணைக் கெடுவை ஒத்தி வைத்து காலதாமதம் செய்து கட்சிக்காரரை வருத்தி வந்தார்கள். குட்டிச் சுவரிலே தேள் கொட்ட தண்ணீர் மிடாவிலே நெறிகட்டினது போல நியாயம் ஒரு பக்கம் இருக்க வேறொரு பக்கத்திலே நீதிபதிகள் இருந்து கொண்டு அதற்கனுகூலமாகச் சாட்சிகளை அதட்டி, உருட்டி வாக்குமூலம் வாங்கி எக்கச்சக்கமாய்த் தீர்ப்பு அளித்து வந்தார்கள். தீர்க்கதரிசிகள் போல சிலர் வழக்காளிகளைப் பார்த்த மாத்திரத்திலே தப்பான எண்ணங்கொண்டு அதற்குத் தக்கபடி சாதக பாதகஞ் செய்து வந்தார்கள். செப்பிடு வித்தைக்காரர் செப்பையும் பந்தையும் ஒரு கணத்திலே மாற்றுவது போல சில நீதிபதிகள் ஒருவருடைய அனுபவ சுதந்திரங்களை அநியாயம் செய்துவந்தார்கள்.

## உத்தியோக வூழியம் :

சென்ற தலை முறையிலே, நீதிபதிகள் போன்ற உயரிய அதிகாரிகள் உத்தியோகம் புரிந்த ஒழுங்கை வேதநாயகம் பிள்ளை விவரிக்கின்றார். இவர் காலத்திலே நீதிபதிகள் எவ்வளவு முறைகேடாக நடந்தார்கள் என்பதை முந்திய அதிகாரத்திலே பார்த்தோம். இவர்களே அன்றி, அதிகாரிகள் எவ்வளவு மமதையுடன் நடந்தார்கள் ? லஞ்சமும் ஊழலும் அவர்களிடையே எவ்வாறு மலிந்து கிடந்தன ? வழக்கறிஞர்கள் நியாயத்தை வாதித்தார்களா ? அநியாயத்தை வாதித்தார்களா ? ஏன் அவர்கள் ஆங்கிலத்திலே வாதிக்க வேண்டும் ?

உத்தியோகத்தர் பொதுமக்கள் ஊழியர், அதிகாரிகள் அல்ல, சேவகர்; எசமானர் அல்ல என்று இப்போது நாம் இயம்புகின்றோம். ஊழல் ஒழிக ; லஞ்சம் ஒழிக என்று கூவுகின்றோம். ஆனால், அக்கிரமங்கள் நாள்தோறும் நம் கண் எதிரே நடக்கின்றன; அதைத் தடுக்க நாம் முற்படுவதில்லை. அநியாயம் இழைக்கப் பட்ட போதும் ஏன் என்று தட்டிக் கேட்பதில்லை; பின்வாங்குகின்றோம். நாம் சுதந்திரர்; நம்மைப் போன்றவர் அல்ல வேதநாயகம் பிள்ளை. 'அதிகார தர்பார்' நடந்த அக்காலத்திலே, தயவு தாட்சணியம் இன்றித், தடி யாட்சியை எதிர்த்தெழுதியவர் இவர்

ஒருவரே. காங்கிரஸ் மகா சபை அப்போது தோன்ற வில்லை. நெறி தவறிய நீதிபதிகளை நையாண்டி செய்தும், கண்டித் தெழுதியும் எச்சரிக்கை செய்தார். வரம்பு மீறிய அதிகாரிகளைக் கேலி செய்து பரிகசத்துக் குள்ளாக்கினார்; குத்தலாகக் கூறி அவர்கள் நேர்மையைத் தூண்ட முற்பட்டார். உத்தியோகத்தர் களைக் கருதி இவர் எழுதிய கேலி பரிகசங்கள் தமிழிலே மிக வுயர்ந்த அங்கதங்கள்.

ஆனால் தற்போது இவற்றை யாரும் அறியார். இன்றைய சூழ்நிலையிலே இவற்றை வெளியிடுவதும் விளம்பரப் படுத்துவதும் மிகவும் அவசியமே. இவற்றைப் படிப்பவர் வேதநாயகம் பிள்ளையின் களங்க மற்ற உத்தியோக வாழ்வைப் போற்றாதிரார். உண்மை ஒழுக்கம் நேர்மை முதலிய அவர் குண நலங்களைப் புகழா திரார். ஆதலின் நேர்மையற்ற நீதிபதிகளுக்கு அக்கிரம அதிகாரிகளுக்கு அநியாய வாதிகளுக்கு நியாயம் நேர்மைகளுக்கு நிலைக்களனான வேதநாயகம் பிள்ளை கூறிய அறிவுரைகளைத் தொகுத்துச் சுருக்கி முடிந்தவரை அவர் நடையிலேயே கொடுக்கின்றோம்.

### அதிகார மமதை :

'அற்பனுக்கு ஐசுவரியம் வந்தால், அர்த்த ராத்திரியிற் குடை பிடிப்பான்' என்பது பழமொழி. அவனுக்கு அதிகாரங் கிடைத்தவுடனே தன்னுடைய

முன்னைய நிலையை அறவே மறந்து தன்னை ஒரு அவதார புருடன் போல எண்ணிக் கொள்வான். வித்தையிலும் புத்தியிலும் தனத்திலும் குலத்திலும் தனக்குச் சமானமானவர்கள் ஒருவரும் இல்லை என்று இறுமாந் திருப்பான்.

' அவன் இருக்கிற இடத்திலே ஈ பறக்கக்கூடாது; எறும்பு ஊரக் கூடாது; குருவி கத்தக் கூடாது. ஒருவரும் பேசக் கூடாது; எப்போதும் நிசப்தமாய் இருக்க வேண்டும். அவனுடைய வீட்டுக் கெதிரே ஒருவரும் சோடு போட்டுக் கொண்டு நடக்கக்கூடாது ; அங்க வஸ்திரம் போடக் கூடாது; கை வீசிக்கொண்டு நடக்கக் கூடாது ; தாம்பூலம் தரிக்கக் கூடாது. சிங்கத்தின் குகை ஓரத்திலே போகிறவர்கள் பயந்து பதுங்கிக் கொண்டு போகிறது போல, இவன் வீட்டுக் கெதிரே செல்லுகிறவர்களும் நடுங்கிக் கொண்டு நிசப்தமாகப் போகவேண்டும்.

அவன் வெளியே புறப்பட்டால் உட்கார்ந்திருக் கிறவர்கள் எல்லோரும் எழுந்து விடவேண்டும்; நடக்கிறவர்கள் எல்லோரும் நின்று விடவேண்டும் ; சகலரும் பூமியிலே விழுந்து சாட்டாங்கத் தண்டஞ் செய்யவேண்டும்; அப்படிச் செய்யாதவர்களுக்கு ஆக்கினைகளும் அபராதங்களும் கிடைக்கும். அவனைக் கண்டவுடனே சோடு போட்டுக் கொண்டிருப்பவர்கள் அவைகளைக் கழற்றுகிற வேகத்தைப் பார்த்தால்;

அவனே அடிப்பதற்காகவே கழற்றுவதாகத் தோன்றும். ஆனால், வாஸ்தவத்தில் மரியாதைக்காகச் சோடு களைக் கழற்றுகிறார்களே அன்றி அடிப்பதற்கல்ல.

அவன் தெருவிலே நடந்து போகும்போது தெரு முழுவதும் தனக்கே சொந்தம்போல அடைத்துக் கொண்டு கால் ஒரு பக்கம், கை ஒரு பக்கம், வேட்டி ஒரு பக்கமாக விறைத்துக் கொண்டு நடப்பான். அவன் நடக்கும்போது அவனுடைய சோடு அவனைப் படீர் படீர் என்று அடித்து கொண்டு போகும். அவனே மட்டும் எல்லோரும் வணங்க வேண்டுமே தவிர, அவன் ஒருவரையும் வணங்குகிறதில்லை. இறுமாப் புடன் அவன் ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டு நடக்கிறதே அல்லாது, பூமியைப் பார்த்து நடக்கிற தில்லை. காலிலே விடந் தீண்டினாலும், அவன் குனிந்து பார்க்கிற தில்லை. தலையிலே வாசற்படி இடித்தாலும் குனிகிறதில்லை.

'அதிகாரத் தானத்திலே அவன் இருக்கும் போதும், மக்கள் எல்லாரும் கைகட்டிக் கொண்டும், வேட்டி களைத் தூக்கிக் கட்டிக் கொண்டும் தூரத்திலே நிற்க வேண்டுமே அல்லாது அவன் சமீபத்திலே ஒருவரும் நெருங்கக் கூடாது. கண்ணாலே ஒருவரையும் அவன் ஏறெடுத்துப் பார்க்கிறதில்லை. அவனுடைய வாயிலே வசவும் திட்டும் புறப்படுமே அல்லாது நல்ல வார்த்தை

கள் வருவதில்லை. பேய்க்குக் கள் வார்த்ததுபோல, அவனுடைய முகத்திலே எப்போதும் கோபம் கூத்தாடிக் கொண்டிருக்கும். பொறுமையாக அவன் ஒரு காரியத்தையும் விசாரிப்பதில்லை. அவனை யார் அதிகமாக வணங்கி முகத்துதி செய்கிறார்களோ, அவர்கள் பட்சம் தீர்ப்புக் கூறுகிறதே யன்றி, உண்மையைக் கண்டுபிடித்து அவன் தீர்மானிக்கிற தில்லை.

## அகம்பாவம் ஆகாது :

இவனுக்கு இந்த மமதை ஏன்? அகம்பாவம் எதற்கு ? மனிதன் தன்னைத் தான் அறிவான். ஆனால், அவன் ஒருநாளும் கருவப் படமாட்டான் ; இறுமாந்திரான். நம்முடைய தேகத்தின் அசுத்தங்களையும், ஆசாபாசங்களையும், சித்தவிகாரங்களையும், நமக்குண்டாகிற வியாதிகளையும் நாம் யோசிப்போமானால் வெட்கப்பட்டு நாம் தலை குனிய வேண்டியதே அல்லாமல் கருவப்படுவதற்கு என்ன இடம் இருக்கிறது ? அசுத்தத்திலே பிறந்து அசுத்தத்திலே வளர்ந்து, அசுத்தத்திலே இறந்து போகிறோம். இரத்தமும் மாமிசமும் எலும்பும் நரம்பும் மலசலாதிகளுங் கூடிய நம்முடைய தேகம் அசுத்தமே அன்றி வேறல்ல; ஏன் இந்த அகம்பாவம்? கண்ணிலே பீளை, காதிலே குறும்பி, மூக்கிலே சளி, வாயிலே எச்சில்—இப்படித் தேகம் முழுவதும் துர்நாற்றம்.

நம்முடைய வாழ்வும் தாழ்வும் சுவாமியினுடைய கையில் இருக்கின்றனவே அல்லாமல் நம்முடைய இச்சையிலே என்ன இருக்கிறது? அடுத்த நிமிடம் இன்னது வரும் என்பது நமக்குத் தெரியுமா? ஆஸ்திகளை நினைந்து கருவப்படுவோமாளுல் அவை அநித்தியம்; பிறக்கும்போது ஒன்றும் கொண்டுவந்ததில்லை. எத்தனை நாள் இவை நம்மோடு கூடியிருக்கும் என்பதும் நிச்சயம் இல்லை. கல்வியைப் பற்றி இறுமாப்பு அடைவோமாளுல், அது, பிறர் போதித்ததே அன்றி, நம்மோடு கூடப் பிறந்த தல்லவே. எவன் தன்னைத் தானே உயர்த்திக் கொள்கிருனே அவன் தாழ்த்தப் படுவான். எவன் தன்னைத்தானே தாழ்த்துகிருனே அவன் உயர்த்தப்படுவான். மேற்குலம் என்று பெருமை பேசுவதும் ஏழைகள் என்று பிறரை இகழ்வதும் கூடாது; அது பாவம்; குணமும் புத்தியும் சிரேட்டமே தவிர, சாதிபேதங்களும் அந்தஸ்துகளும் மனிதர்களுடைய கற்பனைகளே. பிறந்தபோதோ எல்லாரும் சமானம்; மானிடர் அனைவரும் சகோதரரே. எண்ணிக்கை இல்லாத ஏழைகளின் தேகப் பிரயாசையால் நமக்குச் சகல பாக்கியங்களும் கிடைக்கின்றன. அவர்களை நாம் பெரிய உபகாரிகளாகவே கருதவேண்டும். அவர்கள் உழைப்பின்றேல் உலக வாழ்வில்லை.

யாருக்கும் அகம்பாவம் கூடாது அதுவும் அதிகாரிகளுக்கு அது அறவே கூடாது. ஏன் என்றுல்,

மக்களுடைய நன்மைக்காக அதிகாரிகள் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். மக்களுடைய சம்பளங்களையே அவர்கள் வாங்கிச் சாப்பிடுகிறார்கள். ஆதலின் மக்க ளுக்கு ஊழியக்காரர்களே அல்லாது எசமானர்கள் அல்ல. இவ்வாறு நினையாமல் மக்களைத் தங்களுக்கு அடிமைகள் போல எண்ணுகிற அதிகாரிகள் அக்கிரமி கள் அல்லவா ?

## லஞ்சப் பழக்கம்

### தொண்டர் தம் பெருமை :

முடியரசோ குடியரசோ-அரசு எதுவானுலும், தனியுடைமையோ பொதுவுடைமையோ—கொள்கை எதுவானுலும், அரசியலை அமுல் நடத்துபவர் அதிகாரிகளே.[1] அரசு மாறும், அரசியல் கொள்கை மாறும்; ஆனுல் அதிகாரிகளில் மாறுதல் இல்லை.

சனநாயக வாட்சியிலே சட்ட சபைக்குத்தான் முதலிடம். அது இயற்றும் சட்டங்களை நடத்திவைக்கும் பொறுப்பு அறமன்றங்களையும்[2] செயற்குழுவையும்[3] சேர்ந்தது. நமது வாழ்க்கையை வரையறை செய்து, விருப்பு வெறுப்புகளைக் கட்டுப்படுத்தி, உரிமைகளைப் பாதுகாத்து, நம்மை ஆளுவது சட்டங்களே[4] என்பதை யாரும் அறிவர். சட்டசபையிலே பிறந்த சட்டங்களைப் போலவே, அவ்வப்போது அதிகாரிகள் பிறப்பிக்கும் விதிகளையும்[5] மதித்து நடப்பது தவிர்க்க முடியாததாகிறது. சிற்சில சமயங்களில் இவர்களே நீதி வழங்குபவராகவும் இருப்பது அவசியமே. ஆதலின் ஆட்சி முறையிலே அதிகாரிகளுக்கு அளிக்கப்பட்டிருக்கிற முதன்மையையும் முக்கியத்துவத்தையும் நாம் குறைக்க முடியாது; குறைக்கவும் கூடாது. இவர்கள் பொதுநல ஊழியர் எனப்படுவார்.

---

1. Bureaucracy
2. Judiciary
3. Executive
4. Rule of law
5. Rule of Regulations

இந்தப் பொது நல ஊழியம்,[6] போரூழியம்[7] என்றும் அமைதியூழியம்[8] என்றும் இருவகையாகப் பிரியும். ஒவ்வொன்றிலும் எத்தனை எத்தனையோ கிளைகள், கொப்புகள், விளார்கள்—எண்ணத் தொலையா. இவ்வாறு பல திறப்பட்ட அரசியலூழியரைத் துரைத்தனத்தார் அல்லது அரசாங்கத்தார் என்கிறோம். நல்லாட்சிக்கு இவர்கள் நடத்தையிலே நாணயம் வேண்டும். ஒழுக்கத்திலே உண்மை வேண்டும். எண்ணத்திலும் செயலிலும் நேர்மை நியாயம் வேண்டும். அரசியலின் எஃகுச்சட்டம் இவர்கள் அல்லவா? ஒரு நாட்டின் முதுகெலும்பும் இவர்களே. ஆதலின், தொண்டர் தம் பெருமை சொல்ல ஒண்ணாதது என்றது இந்தப் பொது நலவூழியர்க்கே மிகவும் பொருந்துவது.

நமது நாட்டிலே இந்த ஊழியத் தாபனம் உருவாகியது. சென்ற நூற்றாண்டின் இடையிலே; நூறு வருட வளர்ச்சி இதற்குண்டு. இந்தத் தாபனம் தன் கடமையிலே சிறிது வழுவுமானால், பொறுப்பை உணராது போனாலும், எத்தகைய விபரீதங்கள் விளையும் என்பதை இதன் ஆரம்ப காலத்திலேயே வேதநாயகம் உணர்ந்தார். அது செழித்தோங்கி வளர்ந்து மக்களுக்குப் பழுமரம்போலப் பயன்பட வேண்டும் என்று விரும்பினார். ஆதலின், தமது அறிவுரைகளால் அதனை வளர்க்க முற்பட்டார். உத்தியோகத்தர் அதிகாரிகள் அல்ல, அவர் ஊழியர். அவருக்கு அடக்கம் அவசியம் என்றார். முந்திய அதிகாரத்திலே இதைப் படித்தோம்.

---

6. Public Service
7. Military Service
8. Civil Service

அதிகார மமதையைப் போலவே லஞ்சப் பழக்கத்தையும் வேதநாயகம் வெறுத்தார்.

வாங்குவீர் பரிதானம்—உமை விட்டு
நீங்குமோ அவமானம்

என்று அதை இகழ்ந்தார். அதற்குரிய அவர் வாதங்களைச் சுருக்கித் தருகிறோம்.

## ஒழுக்கமா திறமையா :

'கடவுளைப்போல அரசனுக்குச் சருவலோக சஞ்சாரமும் சருவ சக்தியும் இல்லை. ஆதலின், உத்தியோகத்தர் மூலமாகவே அவன், அரசாங்கத்தை நடத்த வேண்டியிருக்கிறது. உத்தியோகத்தர்கள் ராசப் பிரதிநிதிகள்; அவர்கள் மிகவும் மேலானவர்களாய் இருக்கவேண்டும். திறமையும் நல்லொழுக்கமும் உள்ளவர்களையே தேடி, அவர்களுக்குத் தகுந்த உத்தியோகங்களைக் கொடுக்க வேண்டும். வேலை பார்க்கும் திறமையிலே அதிமேதாவியாய் இருந்தாலும், ஒழுக்கக் கேடன் ஆயின், சிறு பதவியும் அவனுக்குக் கொடுக்கக் கூடாது. யோக்கியர்களையே தேடி, பதவிகளிலே அமர்த்தினால், உலகிலே தகுதி அதிகரிக்கும். யோக்கியதையைக் குறித்து யாதொரு பரீட்சையும் செய்யாமல், கல்வியிலே யார் தேர்ந்து வருகிறார்களோ அவர்களுக்கே உத்தியோகம் கொடுக்கப்படுகிறது. கல்விப் பரீட்சையுடன் ஒழுக்கப் பரீட்சையும் செய்யாமல் யாருக்கும் உத்தியோகம் கொடுக்கக் கூடாது.

'ஆங்கில பாடசாலைகளிலே கடவுள் பக்தி நல்லொழுக்கம் முதலியவை கற்பிக்கப்படுவதில்லை. லௌகிக சம்பந்தமான சில காரியங்களே கற்பிக்கப்

படுகின்றன. ஆதலின் மாணவர்கள், உலகாயதர் களாயும் நாத்திகர்களாயும் வளர்கிருர்கள். அவர்க ளுக்கு உத்தியோகம் ஆனவுடன் பணமே தெய்வம் என்று நினைத்து, அதைச் சம்பாதிப்பதற்காக சகல அக்கிரமங்களையும் செய்கிருர்கள்.

'அறுக்கமாட்டாதவன் இடுப்பிலே ஐம்பத்தெட்டு அரிவாள்' என்பது பழமொழி. ஒரு வேலை கூடப் பார்க்க சக்தி இல்லாதவருக்கு, ரெவின்யூ வேலை, சிவில் வியவகார வேலை, மாஜிஸ்டிரேட் வேலை முதலிய பல கொடுக்கப்படுகின்றன. 'பல சரக்குக் கடைக் காரனைப் பயித்தியம் பிடித்ததுபோல' இவர்கள், ஒரு வேலையையாவது சரியாய்ப் பார்க்காமல், எல்லா வேலை களையும் குழப்பிக் கொண்டு காலம் போக்குகிருர்கள். மேலும் அவரவர் யோக்கியதைக்குத் தகுந்த உத்தியோ கம் இன்றி, இழிந்தோர் மேற் பதவியிலும், உயர்ந்தோர் தாழ்ந்த பதவியிலும், வைக்கப்பட்டிருக்கிருர்கள். குறைந்த தேவையுள்ளவர்க்கு மிகுந்த சம்பளமும், அதிக வேலையுள்ளவர்க்குக் குறைந்த சம்பளமும் கொடுக்கப்படுகின்றன. ஒரு வேலையும் இல்லாமலே சிலருக்கு வகை தொகை இன்றிச் சம்பளங்கள் தரப் படுகின்றன.

### வேலியே பயிரை மேய்ந்தால் :

'அதிகாரிகள் பரிதானத்தை விரும்பாதபடி, அவர் களுக்குப் போதுமான சம்பளங்கள் கொடுக்கப்படு கின்றன. அப்படியிருந்தும் அவர்கள் ஒவ்வொரு வழக் கிலும் உபயவாதிகளிடமும் கை லஞ்சம் வாங்குகிருர்

கள். அதைச் சீரணம் செய்ய, இருதிறத்தாருக்கும் சிறிது சாதகமும் சிறிது பாதகமும் செய்கிறுர்கள். சாதகம் செய்யக் கூடாத நிலேயிலே இனிவரும் வழக்குக்கு அச்சாரமாக வைத்துக் கொள்ளுகிறுர்கள். அன்றியும், அவர்களுக்கு வேண்டிய துணியை சவளி வியாபாரிகள் தருகிறுர்கள். தானிய தவசங்களே நிலச்சுவான்கள் கொடுக்கிறுர்கள். உப்பு முதல் கற்பூரம்வரை அவர்களுக்கு இலவசமாய்க் கிடைக்கின்றன.

'கள்ளர் அமாவாசையிலே மட்டும் திருடப் போகிறுர். சில அதிகாரிகள் அல்லும் பகலும் கொள்ளே அடிக்கிறுர்கள். இவர்கள் அடிக்கும் கொள்ளேக்குக் கள்ளர் கொள்ளே உறை போடக் காணுமா? கள்ளர்கள் அகப்பட்டு, இவர்கள் முன் விசாரணேக்கு வரும்போது, குயவனுக்குப் பலநாள் வேலே; தடிகாரனுக்கு ஒரு நாள் வேலே என்பது போல, பலநாள் அவர் திருடிச் சேர்த்த பொருளே ஒரு நாள் இவர்கள் தட்டிப் பறித்துக் கொள்ளுகிறுர்கள். திருடரிடத்திலும் திருடுகிற திருடர் எத்தகைய திருடராய் இருக்க வேண்டும்? பசுவுக்குப் புலியும், கிளிக்குப் பூனேயும் காவல் வைத்தது போல, மக்களுக்குப் பாது காவலாக இவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறுர்கள்.

'சில அதிகாரிகள், லஞ்சம் வாங்கிஞல், பெயர் கெட்டுப் போகும் என்றஞ்சி, தங்கள் வீடுகளிலே நடக்கிற விசேட தினங்களில் சகல பொருள்களேயும் பற்றிக் கொள்ளுகிறுர்கள். கலியாணங்களும், ருது சாந்திகளும், உபநயனங்களும், சிரார்த்தங்களும் அவர்கள் வீடுகளிலே அடிக்கடி வரும்.

'கல்லுளிச் சித்தன் போனவழி, காடு மேடெல்லாம் தவிடு பொடி'; சில பெரிய அதிகாரிகள் அவர்களுடைய அதிகார எல்லைக்குள் ஒரூரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போகும் போது, அக்கம் பக்கங்களிலே உள்ள ஆடு மாடு முதலிய மிருகங்கள், கோழி கொக்கு முதலிய பட்சிகள், அதமாய் விடுகின்றன. நூறு புலிகள் புறப்பட்டாலும், அத்தனை உயிர்களை அவ்வளவு விரைவிலே அவை தின்னு. நவதானியங்களும் வைக்கோல் புல் விறகுகளும் பல கிராமங்களிலிருந்து சுமை சுமையாய் வந்து குவியும்; பெரிய துரைக்குப் பயன் பட்டு எஞ்சியவற்றைச் சில்லரை தேவதைகள் பங்கிட்டுக் கொள்வார்கள்.

'அதிகாரி வீட்டுக் கோழி முட்டை குடியானவன் வீட்டு அம்மியை உடைக்கும்' என்பது பழமொழி. ஒரு அதிகாரிக்கு யார்மீது துவேஷம் இருக்கிறதோ அவர் கெடுவது என்னவோ நிச்சயம். வழக்கமாய் லஞ்சம் வாங்குகிற அதிகாரிக்கு எவன் லஞ்சம் கொடுக்கவில்லையோ அவன் சன்ம சத்துரு. அவனைக் கழுத்தறுக்க அதிகாரி சமயந் தேடுகிறபடியால், லஞ்சங் கொடுத்து அவன் தயவைச் சம்பாதிக்க வழக்காளி உடன் படுகிறான்.

'லஞ்சம் வாங்குபவர்க்கும் கொடுப்பவர்க்கும் தண்டனை விதிக்கப் பட்டிருக்கிறது. லஞ்சம் வாங்குபவர்க்கு, சருவானுகூலமான சட்டம் இதைவிட வேறொன்றிருக்க முடியுமா? அதனால், லஞ்சப் பிராது கொண்டுவர யாரும் துணிகிறதில்லை; துணிந்தாலும், அதிகாரிகளுக்கு விரோதமாய்ச் சாட்சிகள் அகப்படா. லஞ்சம் ருசுவாகாவிட்டால், பிராது செய்தவன் தண்டிக்கப் படுவதும் அன்றி, அதிகாரிகள் பகைக்கும்

பாத்திரம் ஆகின்றான். இவ்வாறு லஞ்சம் வாங்கி களுக்குப் பல சாதகங்கள் இருக்கின்றபடியால், அச்ச மின்றி அவர்கள் கொள்ளை அடிக்கின்றார்கள்.

'லஞ்சம் கொடுப்பவரைத் தண்டிப்பது என்ற விதியை நாம் அனுசரிக்கக்கூடாது.* ஒருவன் லஞ்சம் வாங்குகிறான் என்றாவது, வேறு தீய செயல் களைப் புரிகின்றான் என்றாவது, பலருக்கும் பகிரங்க மாய்த் தெரிந்தால், அதைப் பற்றி, விசாரணை இன்றி, அவன் மீது புகார் வராமல் இருந்தாலுங் கூட, அவனை உடனே விலக்கிவிட வேண்டும். யோக்கியமான உத்தியோகத்தனை நன்கு மதித்து, நடத்தல் வேண்டும். மூப்பு நோய் முதலியவற்றால், வேலை பார்க்க இயலா விடின், அவர்களுக்கு உபகாரச் சம்பளத்துடன் ஓய்வு கொடுக்கவேண்டும். அகாலமரணம் அடைந்தால், அவர் குடும்பப் பராமரிப்பை அரசாங்கம் ஏற்க வேண் டும். பிற்காலக் குடும்ப வாழ்வைக் கருதியே பலரும் லஞ்சத்தைக் கையாடுகிற படியால், அரசாங்கம் தமது குடும்பத்தைப் பாதுகாக்கும் என்ற நிச்சய மிருந் தால், பலரும் லஞ்சம் வாங்காமல் பரிசுத்தராய் இருப்பர்.'

ஏதுக்கு வாங்கிறீர் லஞ்சம் —உமக்கு
இதை விட வேறுண்டோ பஞ்சம்
வாதுக்கு வீணே வழக்குரை பேசி—
வாங்கிறீர்; என்ன பிழைப்பு அது ? சீசி
ஏதுக்கு வாங்கிறீர் லஞ்சம் ?

இப்படி லஞ்சத்தை ஒழிக்க வேதநாயகம் பிள்ளை பாடிய இசைப்பனுவல்கள் பல; அவற்றிலே ஒரு பாடலின் ஒரு பகுதி பின் வருவது :

---

* நமத ரசியலாருக்கு இந்த அறிவு சமீப காலத்திலே தான் வந்தது.

பியாகடை—சாப்பு

ஆர்வேணுமோ அவர் வாங்கட்டும்
நீ—லஞ்ச
ஆசை வையாதே—நெஞ்சே.

சம்பளம் இருக்கப்பின் மேல்வருமானம்
தனைநாடி ஏன் அதன்மேல் நித்திய தியானம் ?
அம்புவி மிசை விளைந்திடும் அவமானம் ;
அதைவிட எடுக்கலாமே உபதானம்.

அஞ்சிடும் பல
பஞ்சையோர்களையே—நிதம் துன்
பஞ் செய்து
மிஞ்சவே அவர்
லஞ்சமே தர
வஞ்சமே புரி
பஞ்ச பாதகர்—

ஆர் வேணுமோ அவர் வாங்கட்டும்
நீ—லஞ்ச
ஆசை வையாதே—நெஞ்சமே

# வழக்கறிஞர்களுக்கு

## வக்கீல் யார் ?

உலகிலே நடைபெறுகிற வணிகம் வர்த்தகம் லேவாதேவி, தாய பாகங்கள், உரிமைகள் உடன் பாடுகள் ஒப்பந்தங்கள் பற்றி, எண்ணிறந்த சட்ட திட்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன; எத்தனையோ ஒழுங்குகளும் ஒழுங்கீனங்களும் நீதிகளும் அநீதி களும் நமது வாழ்க்கையிலே அன்றாடும் குறுக்கிடு கின்றன. அவற்றை எல்லாம் ஒவ்வொருவனும் அறிந்து, நீதி மனறங்களிலே விவகரிப்பது, இயலாது. ஆதலின் சட்டந் தெரியாத பாமர மக்களுக்கு உபகார மாக, எல்லா நாடுகளிலும், வழக்கறிஞாகள் தோன்றி யிருக்கிறார்கள். அவர்கள் துன்பம் அடைந்தவர்களுக் குத் துணைவர்கள்; பாத்தியக் கிரமங்களுக்குப் பாது காவலர்; பொருள் இழந்தவர்க்குப் புகலிடம். ஆதலின் அவர்கள் சகலகலா பண்டிதர்களாய் விளங்க வேண் டும். வழக்குகள் சம்பந்தமான சகல சட்டங்களும், சாத்திரங்களும் சரித்திரங்களும் நாட்டு நடப்பும் அவர்கள் நன்றாய் அறிந்தவராதல் வேண்டும்.

## நியாய வாதியா? அநியாய வாதி.

'ஒரு வழக்கை வக்கீல் ஏற்பதற்கு முன்னம், அதை அவர் நன்றாய்ப் பரிசோதித்து, நியாய வழக் காய்த் தோன்றினால் மட்டும் ஏற்றுக்கொள்ள வேண் டும். அநியாய வழக்குகளை அங்கீகரிக்கக் கூடாது. ஒருவன் கொலைகாரன் என்று தெரிந்த பிறகு, அவன் கொலையே புரியவில்லை என்று வக்கீல் வாதிப்பது

தெய்வ சம்மத மாகுமா ? அவர் மனச்சாட்சிக்குத் தான் அது பொருந்துமா ? ஒருவன் திருடன் என்று தன் மனசுக்குத் தெரிந்திருக்க, அவன் திருடவே இல்லை என்று சலஞ்சாதிப்பது, எவ்வளவு பெரிய அக்கிரமம். பொய்ப்பத்திரம் என்று தெளிவாய்த் தெரிந்த ஒன்றை, உண்மை என்று நிலை நாட்டினால், அதைச் சிருட்டித்தவனுக்கும் வக்கீலுக்கும் என்ன பேதம் இருக்கிறது. வழக்காளி மனதறியப் பொய் யாதரவை உண்டுபண்ணினான். அதை மெய்யென்று வக்கீலும் சாதித்தால், இருவரும் குற்றம் புரிந்தவர் களே. சந்தேக வழக்குகளை வக்கீல் ஏற்று அதை நடத்தத் தடை இல்லை; ஏனென்றால் உண்மையைக் கண்டுபிடிப்பது கோர்ட்டாருடைய கடமை. அன்றியும், ஒரு கட்சி பொய் என்று நிலைபெறுகிற வரையிலும் அதனை மெய் என்றே கருதுவதுதான் இயல்பு. ஆனால் சிலர், வழக்கின் தன்மையை யோசியாமல், வந்த வழக்கு எந்த வழக்கானாலும், உடனே அதை ஏற்றுத் தங்களது மனச்சான்றுக்கு மாறாகக் கறுப்பை வெள்ளை என்றும், வெள்ளையைக் கறுப்பென்றும் வாதிக்கிறார் கள். இவர்களுக்கு நியாயவாதிகள் என்ற பெயர் பொருந்துமா ?

'ஒரு வழக்கை ஏற்கும்போது, அதன் உண்மை தெரியாமலிருந்து, பிறகு எப்போது தெரிந்தாலும் அப்போது அதனைத் தள்ளிவிட வேண்டும். அதன் பின்பு, எதிர்க் கட்சியை ஏற்றுக் கொள்வது முறை அல்ல. பொய் வழக்காடி, நட்டப்படாதபடி, கட்சிக் காரனுக்குப் புத்தி போதிப்பதும், வழக்குகளை சமாதா னப்படுத்தி வைப்பதும் வழக்கறிஞர் கடமை.

'தீய வக்கீல் கட்சிக்காரனைக் கண்டதும், " உன்னுடைய அதிட்டந்தான், உன்னை என்னிடத்திலே கொண்டு வந்துவிட்டது. என்னிடத்திலே எப்போது வந்தாயோ அப்போதே உன்னுடைய காரியம் எல்லாம் அனுகூலந்தான். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். எதிரியைத் தலை காட்டாதபடி மடக்குகிறேன். அவன் 'லா'மேலே போனால், நான் 'ஈக்குட்டி'* மேலே போவேன்; அறநூலை அவன் ஆதாரங் காட்டினால், ஆங்கில லாவைக் கொண்டு வெல்லுவேன்; பிரெஞ்சு லாவை அவன் பிரயோகித்தால், சர்மன் லாவை நான் விடுவேன்; சர்மன்லாவால் அவன் என்னை அடித்தால், ரோமன் லாவால் நான் அடிப்பேன்" என்று, மெய்யாகவே போருக்குப் புறப்படுபவன்போல, வீரசல்லாபங் கூறுகிறார். இவ்வாறு கட்சிக்காரனை ஏமாற்றுவது தருமமா?

## கட்சிக்காரன் பிச்சைக்காரன் ஆகவா?

'வியாச்சியத் தன்மையையும் தமது பிரயாசையையும், கட்சிக்காரன் தகுதியையும் யோசித்து நியாயமான பீசை வக்கீல் பெறவேண்டுமே அன்றி, அதிகம் கேட்பது முறை அல்ல. கட்சிக்காரன் தோற்றால் அவன் கொடுத்த பீசுகளும் செய்த செலவுகளும் வீண். வென்றாலோ கிரமமான செலவுமட்டும் அவனுக்கு எதிரியினால் கிடைக்குமே அன்றி, அதிகமாகக் கொடுத்த பீசு கிடைக்காது. வழிச்செலவு, படிச்செலவு வாய்தா தோறும் பீசு—இப்படி வழக்கு விசாரணையாகிற ஒவ்வொரு கட்டத்திலும் வக்கீலுக்குப் புதிது புதிதாகக் காணிக்கை கொடுத்து, கட்சிக்காரன் பிச்சைக்காரன் ஆகின்றான். துன்பப்படுகிறவர்களுக்

---

* Equity

குத் துணைபுரிவது எல்லாருக்கும் கடமை அல்லவா? உதவிக்கு மாறாக அட்டைபோல அவர்களை உறிஞ்சுகிறார்களாம் சில வழக்கறிஞர். சில தேவதைகள் அடிக்கடி பலி கேட்பது போல இவர்கள் பீசு கேட்கிறார்களாம். இது தருமந்தானா?

## அக்கிரமம் அல்லவா?

'சிலர், பல ஜில்லாக்களிலே வழக்குகளை வாங்கிப் பூமியை வலம் வருகிறார்கள். காலையிலே காசி; மத்தியானத்திலே மதுரை; அந்தியிலே அயோத்தி. ஆசையே சிறகாகப் பட்சிபோலப் பறந்து திரிகிறார்கள். இந்த விசுவ சஞ்சாரிகளிடம் வியாச்சியங்களைக் கொடுப்பதைக் காட்டிலும் சகல தஸ்தாவேசுகளையும் அக்கினிக்குத் தத்தம் செய்து விடுவது நல்லது.

'ஒரு கோர்ட்டு அல்லது ஊரைவிட்டு மற்றொரு கோர்ட்டு அல்லது ஊருக்குப் போகிற வக்கீல் தனக்காக வேறொரு வக்கீலை ஆஜராகும்படி நியமித்துப் போவது வழக்கம். இது யாரால் எக்காலத்து ஏற்பட்டது என்பது ஒருவருக்கும் தெரியாது. வழக்கைத் தானே நடத்துவதாகக் கட்சிக்காரனிடம் ஒப்புக்கொண்டு, உடன்படிக்கைக்கு மாறாக அந்த வக்கீல் வேறொருவரை எப்படி நியமிக்கக்கூடும்? நியமனம் பெற்ற வக்கீலுக்கோ வழக்கை நடத்த மனமில்லாததால், நேரம் இல்லாததால், விவரம் தெரியாததால், அனேக வழக்குகள் அதோகதி ஆகின்றன. ஒருவருக்காக மற்றவர் ஆஜராகிய வழக்கம், அக்கிரமத்திலே பிறந்தது, அக்கிரமத்திலே வளர்ந்து, அக்கிரமத்திலே நிலைபெற்றிருக்கிறது.

'வக்கீல் தனக்குள்ள சாவகாசத்தையும் சக்தியை யும் அறிந்து மிதமாக வியாச்சியங்களை ஏற்கவேண் டுமே அன்றி, பொருளாசையால் பல ஊர்களிலும் பல கோர்ட்டுகளிலும் அளவற்ற வழக்குகளை ஏற்று, எதையும் கவனிக்க நேரமின்றி அவதிப்படக்கூடாது. ஏற்றுக்கொண்ட வழக்குகளின் சாராமிசங்களையும் சகல சங்கதிகளையும் கவனித்து, அதற்குரிய சட்டங் களையும் சரித்திரங்களையும் மேற்கோர்ட்டார் சித்தாந் தங்களையும் எதிர்க் கட்சியின் பலக் குறைவையும் எடுத்துக் காட்டி, சபைக் கூச்சமின்றி, வாசகதாட்டியா கவும் சமயரஞ்சிதமாகவும் வாதிக்கவேண்டும். நடந்த காரியங்களை விவரிக்கவேண்டுமே அன்றி, புதிய சங் கதிகளைச் சிருட்டிப்பது, கட்சிக்காரனுக்குச் சாட்சித் திட்டம் செய்து கொடுப்பது அறவே கூடாது.

## இது என்ன வாதம் :

'சில வக்கீல்கள் எதை நியாயம் என்று ஒரு வழக்கில் வாதிக்கிறார்களோ, அதையே அநியாயம் என்று வேறொன்றில் வாதிக்கிறார்கள். 'பிள்ளை மைனரானபோது சொத்துக்களைத் தகப்பன் விரயஞ் செய்யக் கூடாது' என்று வாதிக்கிறார்; அவரே அன்றே அதே கோர்ட்டில் விசாரணையாகும் வேறொரு வழக்கில், பிள்ளை மைனரானபோது சொத்துக்களைத் தகப்பன் விரயம் செய்தால், அதை எக்காலத்தும் பிள்ளை ஆட்சேபிக்கக் கூடாது' என்கிறார். இவ்வாறு சமயத்துக்குத் தகுந்தபடி வழக்குக்கு வழக்கு முன்பின் முரணாக வக்கீல் செய்யும் வாதம் துர்வாதம் அல்லவா? வியாச்சிய ரீதிக்குத் தக்கபடி வெவ்வேறு விதமாக வாதிப்பது சிரமமே. என்றாலும் ஒரேவகை வழக்கு களில் விரோதமாக வாதிப்பது விபரீதம் அல்லவா?

## தமிழிலே வாதித்தால் தவறு என்ன ?

'தமிழகக் கோர்ட்டுகளிலே தமிழ் வக்கீல்கள் தமிழில் வாதிக்காமல், ஆங்கிலத்திலே வாதிக்கிறார்கள். தேச மொழியும் தமிழ் ; கோர்ட்டிலே வழங்குகிற மொழியும் தமிழ் ; நியாயாதிபதியும் தமிழர் ; வாதிக்கிற வக்கீலும் தமிழர் ; கட்சிக்காரர் தமிழர்-எல்லாம் தமிழ் மயமாயிருக்க, யாருக்குப் பிரீதியாக அவர்கள் ஆங்கிலத்தில் வாதிக்கிறார்களோ தெரியவில்லை. நியாயாதிபதி அல்லது வக்கீல் ஆங்கிலராய் இருந்தால், ஆங்கிலத்திலே வாதிப்பது நியாயம். தமிழ் நியாயாதிபதி முன் தமிழ் வக்கீல் ஆங்கிலத்திலே வாதிப்பது ஆச்சரியமல்லவா ? ஆங்கில அதிகாரிகள் கூட தேச மொழியிலே பரீட்சையில் தேற வேண்டும் என்ற சட்டம் ஏற்பட்டிருக்கிறது. அப்படியிருக்க தமிழ் வக்கீல்கள் தாய் மொழியைத் தள்ளி விட்டு அந்நிய மொழியிலே வாதிப்பது அசந்தர்ப்பம் அல்லவா ? தமிழ் நன்றாகத் தங்களுக்குப் பேசவராது என்று கௌரவம் போலச் சொல்லிக் கொள்கிறார்கள். இதனினும் இழிவு வேறொன்றில்லை.

'சட்ட நூல்கள் ஆங்கிலத்திலே அமைந்து கிடப்பதாலும், சட்ட நுணுக்கங்களுக்குரிய சரியான பதங்கள் தமிழிலே இல்லாமையாலும் தாங்கள் ஆங்கிலத்தைப் பயன்படுத்துவதாகச் சிலர் சொல்லுகிறார்கள். அது அறியாமையே ; உண்மை அல்ல. தமிழ் நூற்களைத் தக்கபடி ஆராய்ந்தால், பதங்கள் அகப்படாமற் போகா. இரண்டொரு குழுக்குறிகளுக்குத் தமிழ்ச் சொற்கள் இல்லை என்றால், அவற்றை மட்டும்

ஆங்கிலத்திலே வழங்கினால், அவர்களை யார் கோபிக்கப் போகிறார்கள் ?

'வக்கீல்கள் ஆங்கிலத்திலே வாதிப்பது அக்கிரமம் என்று, சில தமிழ் நியாயாதிபதிகளுக்குத் தெரிந்திருந்தும் அதைக் கண்டித்தால், தங்களுக்கு ஆங்கிலந் தெரியாதென்று மற்றவர்கள் நினைப்பார்களே என்று ஆங்கில வாதத்துக்கு இடங் கொடுக்கிறார்கள். நடபடிக்கைகளையும் அவர்கள் ஆங்கிலத்திலே நடத்துகிறார்கள். சில சமயங்களிலே நியாயாதிபதியும் வக்கீலும் ஆங்கிலத்தை நன்றாகப் படியாதவர்கள் ஆனால், ஒருவர் சொல்லுவது ஒருவருக்குத் தெரியாமல், கைச்சண்டை செய்து, சங்கடப் படுகிறார்கள். கோர்ட்டுகள் நாடகசாலையாகத் தோன்றுகின்றன.

'ஒவ்வொரு வழக்கிலும் உண்மையைக் கண்டு பிடித்து, நீதி வழங்குவது கோர்ட்டார் கடமை ; தாய் மொழியிலே கோர்ட்டு நடபடிக்கைகள் நடந்தால் மட்டும் உண்மை வெளியாகுமே அன்றி, மக்களுக்குப் புரியாத மொழியிலே நடந்தால், எப்படி உண்மை வெளியாகும்? தமிழ் நியாயாதிபதிகள் எல்லா நடபடிக்கைகளையும் ஆங்கிலத்திலே நடத்தும்படி சட்டம் இல்லை ; தீர்ப்பை மட்டும் ஆங்கிலத்திலே எழுதலாம். அப்படியிருக்கத், தமிழ் நியாயாதிபதிகளும் வக்கீல்களும் தாங்கள் பயின்ற ஆங்கிலம் மறந்து போகாமலிருக்க, அதை வழங்கி, நியாய பரிபாலனத்தைக் குளறுபடி செய்வது ஒழுங்கா ? விசாரணைகள், தீர்ப்புக்கள், அபராதங்கள், ஆக்கினைகளை, அனைவரும் அறிவது நல்லதல்லவா ? விவகாரங்களைக் கேட்டு,

அதனால், விவேகம் அடைவதற்காகக் கோர்ட்டு வாசல் களிலே மக்கள் கூடுகிறார்கள். ஆனால், அவர்களுக் குப் புரியாத மொழியிலே விவகாரம் நடப்பதால், குருடன் கூத்துப் பார்க்கப் போன கதையாய் முடி கிறது. சுருங்கச் சொன்னால், தமிழ் நியாயாதிபதி முன் ஆங்கிலத்திலே வாதிக்கிற தமிழ் வக்கீல்கள், தமிழ் மொழியையும் தமிழ் மக்களையும் அவமதிக் கிறார்கள்.'

# நண்பர்கள்:

## 1. மகாவித்துவானுடன்

### இலக்கிய மும்மூர்த்திகள்

1872- ஆனி; மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை, நமது வேதநாயகம் பிள்ளையைப் பார்க்கச் சென்ருர். அவ்வமயம் வேதநாயகம் செய்தித்தாள் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார். வந்த மகா வித்துவானை அவர் வரவேற்று, 'பத்திரிக்கையிலே நான் பார்ப்பது, தங்களைப் பற்றியது தான்' என்று, அதை வாசித்துக் காட்டினுர். அதன் சுருக்கம் வருமாறு: 'தமிழுக்குத் தற்போது தூண்களாக விளங்குபவர் இருவர்; ஒருவர் வசனம் வரைவதிலே வல்லவர்; மற்றவர் செய்யுள் புனைவதிலே சிறந்தவர். முன்னவர் ஆறுமுக நாவலர். சிதம்பரத்திலே இவர் பாடசாலை நிறுவித், தமிழை வளர்த்து வருகிருர். பின்னவர், மீனுட்சிசுந்தரம் பிள்ளை. நடையாடு புத்தக சாலையாய்த் திரிந்து, தமது செலவிலே அவர் யாவர்க்கும் தமிழை அறிவுறுத்தி வருகிருர்.' இவ்விருவருடன் வேதநாயகம் பிள்ளையையும் எண்ணி, இவர்களைத் தமிழின் 'மும்மூர்த்திகள்' என்று சொல்லலாம். ஆறுமுக நாவலர் ஒரு புலவர்; தமிழ் வசனத்தை அவர் வளர்த்தார். மீனுட்சிசுந்தரம் பிள்ளை ஒரு வித்துவான்-அதுவும், மகா வித்துவான்; மலை மலையாக அவர் பாடிக் குவித்தார். வேதநாயகம் பிள்ளையோ ஒரு விற்பன்னர். அரிய பண்டிதர்; பெரிய புலவர்; சிறந்த கவி; கலைவாணர். ஆதலின் இவர் எழுதிய உரை நடைகள் நமக்கு முன்மாதிரி; பாடிய இசைப் பனுவல்

கள் நமக்கு வழிகாட்டி, இவருடைய கவித்திறத்தைப் பாருங்கள்; மகா வித்துவானுடைய செய்யுள் திறனே வியந்து பாடுகிறுர்.

வித்தகமார் மீனுட்சி சுந்தரவேளே! ஒரு நூல் *
விளம்பும் என்னேப்
புத்தமுதார் நின்வாக்கால் துதித்தனே; நீ பாடியது
இப் பொருள் நூல் ஒன்ருே
எத்தனேயோ கோவைகள் மற் றெத்தனேயே புராணம்
இன்னும் எண்ணில் நூல்கள்
அத்தனேயும் இத்தனே என்றுள் தனேநா இருந்தாலும்
அறையப் போமோ?

மகா வித்துவான் பாடியவை: புராணங்கள் 22; பிரபந்தங்கள் 42; பிறகாப்பியங்கள் 6. தனிப்பாடல் கள் எண்ணிறந்தன. ஆதலின் கவிராட்சசன் என்று அவர் அக்காலம் புகழப்பட்டார்.

## பாட்டுடைத் தலேவன்:

திருச்சிராப்பள்ளி சில்லாக் கோர்ட்டிலே மொழி பெயர்ப்பாளராக வேதநாயகம் வேலே பார்த்தார் என்ருேம். அவ்வமயம், மலேக் கோட்டைக் கட்டளேத் தம்பிரான் ஒருவர், தருமபுர ஆதீனத் தலேவரால் நியமிக்கப்பட்டவர், தமது மேலிடத்துக்குப் பணிதல் இன்றி, விரோதமாக நடக்கத் தலேப்பட்டார். ஆதலின் இவர்மீது வழக்குத் தொடர ஆதீனத் தலேவர் முற்பட் டார். வழக்கை நடத்தும் பொறுப்பு, மகா வித்துவா னிடம் ஒப்புவிக்கப்பட்டது. தாயுமானவர் கோயிலிலே தருமை யாதீனத்துக்குள்ள உரிமையை வலியுறுத்தி, ஆங்கிலமொழியிலே வரைந்து, அதைக்கோர்ட்டாரிடம்

* நீதி நூல்–1859–ல்

கொடுக்க வேண்டியிருந்தது. விண்ணப்பந் தயாரிக்க வேதநாயகம் அன்றி வேறு யாரும் இல்லை என்று மகா வித்துவான் அவரிடம் சென்றார். அவ்வமயம் எதிர்க்கட்சியாரும் அதே கருத்துடன் நமது கலை வல்லாரைச் சூழ்ந்து கொண்டிருந்தனர். அதுகண்ட மகா வித்துவான், வேறிடத்திருந்து தாம் வந்த காரணத்தை ஒரு கவியின் மூலம் தெரிவித்தார். 'கடவுள் காரியம் தமது கட்சியே நியாயமானது; எதிர்க் கட்சியார் அநியாயக்காரர். வேதநாயகமோ மெய்யே உருவானவர்; கார்மேகம் கைம்மாறு கருது வதில்லை' என்ற கருத்தமைந்த அந்தக் கவியைப் படியுங்கள்.

மையேறுங் கண்ணி யொருபாகன் காரியம்
 மற்றிதுதான்
பொய்யே அல; முகிற் கேதுகைம் மாறு;
 பொறையினொடு
மெய்யே உருக்கொள் புகழ் வேதநாயக
 வித்தகன் தன்
கையே! உன்னைப் புகழ்வேன்; புகல் வேறிலை
 கண்டு கொள்ளே.

கோர்ட்டு விவகாரங்களை எழுதி எழுதித் தேர்ந்த கைத் திறத்தைப் புகழ்வதன் மூலம் புகலடைந்த மகா வித்துவானை வேதநாயகம் வரவேற்று, எதிர்க்கட்சியார் வேண்டுகோளைப் புறக்கணித்து ஓய்வு நேரங்களிலே கருத்து முழுவதையும் செலுத்தி, ஆங்கில மொழியிலே மனுவைத் தயாரித்தார். கோர்ட்டிலே அது கொடுக் கப்பட்டபோது அதிலே வாதித்து வற்புறுத்தப்பட்ட உண்மையைக் கோர்ட்டாரும் ஒப்பித், தருமையாதீனத் தலைவர் சார்பிலே நியாயப்படி உரிமையை நிலை நாட்டினார்கள். இதனால் வேதநாயகத்தின்பால் மகாவித்து

வானுக்கு நன்மதிப்புப் பெருகியது. அவர் செய்த உதவிக்குக் கைம்மாறு யாது ? பொன்னும் பொருளும் அவர் விரும்புகிறவர் அல்லவே. ஆதலின் அவருடைய புகழை அமைத்துப் பாமாலை புனைய மகாவித்துவான் அவாவினர். ஐந்திணைக் கோவை ஒன்று பாடினர். குளத்தூர்க் கோவை என்று அது வழங்கப்படுகின்றது. 438 பாடல்களை உடையது. அது பாடப்பட்ட காலம் 1853. அதிலே ஒரு பாட்டு :

எறியுங் கலிதன் தலைசாய்த்திடத் தமிழின் அருமை
அறியும் புருட மணிவேத நாயகம்அண் ணல்வெற்பில்
செறியும் படிநம் இருபேரையும் இன்று சேர்த்த தெய்வம்
முறியும் படிஇடை யேசெய்யு மோசற்று முன்னலையே

'புருடருள் மணிபோன்றவர் வேதநாயகம்; தமிழருமை அறிந்தவர். எங்கள் நட்பிலே இடையூறு இல்லை; எங்களைச் சேர்த்ததெய்வம் இனிப் பிரிக்காது; இன்று போலவே என்றும் இருப்போம்' என்று எக் களிக்கிருர். இந்த எக்களிப்பு தெய்வத்திறம் பேசல் என்ற அகப் பொருள் துறையிலே அமைந்து கிடக்கிற அருமையைப் பாருங்கள்.

### ஓரரங்கேற்றம் :

1857-ல் தரங்கம்பாடியிலே முனிசீப் பதவி ஏற்ற வேதநாயகம் சிலநாளிலே சீகாழிக்கு மாற்றப்பட்டார். தம்முடன் சிலநாள் தங்கியிருக்குமாறு அவர் மகா வித்துவானை அழைத்திருந்தார். நீதி நூலை வேத நாயகம் வெளியிட்ட சமயம் அது. நூல் முழுவதையும் பார்வையிட்டு மகாவித்துவானும் அதற்குச் சிறப்புப் பாயிரம் தந்திருந்தார். மகாவித்துவானும் சீகாழி சென்று விற்பன்னருடன் சிலநாள் தங்கியிருந்தார்.

இவர் வருகையைத் தெரிந்த சீகாழிப் பிரமுகர், இவரைக் கொண்டு ஒரு பிரபந்தம் செய்விக்கக் கருதி ஞர்கள். குளத்தூர்க் கோவையை வாசித்துச் சுவைத் தவர்கள் அவர்கள். ஆதலின் தமதூர்ச் சிவபெருமான் மீது கோவை நூல் பாடுமாறு, அவர்கள் மகாவித்து வானே வேண்டினர்கள். விற்பன்னரும் வற்புறுத்தவே மகாவித்துவான் அதற்கு உடன்பட்டார். நூல் இயற்றத் தொடங்கி நாள் ஒன்றுக்குப் பத்துப் பதினைந்து கவிகளாக ஆராய்ந்து செய்து வந்தார். வேதநாயகம் விரும்பியவாறு அவ்வப்போது அவர் வீடு சென்று, தாம் பாடிய கவிகளேச் சொல்லி அவரை மகிழ்வித்து வந்தார். வழக்கம் போல ஒருநாள் கோவைச் செய்யுட் களிலே சில கூறக் கேட்டு, வேதநாயகம் பரவசப்பட் டிருந்தபோது பொருமை காரணமாகக் குறைகூறத் தலைப்பட்ட ஒருவரை அவர் மிகவும் வெகுண்டு, 'மகா வித்துவானுடைய கவிகளை நான் பாராட்டுவதையும் பொருட்படுத்தாது அவருக்கு அவமதிப்பை உண் டாக்க முயல்கிறீர். உங்களை உபசரித்துத் தம்முடன் வைத்து உணவளித்துவரும் அவருக்கே, அதுவும் அவருக்கு மிகச் சிறந்த என்னிடத்தே, கேடு நினைக் கிறீர்கள்' என்று கடிந்தார்.

மகாவித்துவானும் சில நாளிலே சீகாழிக் கோவையைப் பாடி முடித்தார். அது அரங்கேறுதற் குரிய நாளும் வந்தது. சிவன் கோயில் தெற்குப் பிரகாரம் வலம்புரி மண்டபத்திலே அரங்கேற்றம் தொடங்கியது. முனிசீப் வேதநாயகம் இந்தக் கவி யரங்கின் தலைவரானர். புலவர்களும் செல்வர்களும் நிரம்பியிருந்தனர். ஒவ்வொரு கவியாக ஆராயப்

பட்டது; அதன் பொருள் விளக்கப்பட்டது. கவிச் சுவையை ருசித்துச் சபையினர் ஆனந்த பரவசர் ஆயினர். ஆனால் அழுக்காறுடைய சிலர், இல்லாத ஆட்சேபங்களை எழுப்பினர். சபையோர் மதிப்பிலே உயர்வது அவர் கருத்து. மகாவித்துவான் தகுந்த சமாதானங்கள் கூறியும் அவர் வாயடங்கவில்லை; விதண்டாவாதம் செய்தனர். அதனால், அரங்கின் தலைவரான நீதிபதி, சினந்து சேவகர்களைக் கொண்டு அவர்களை வெளியேற்றினார். அரங்கேற்றம் தொடர்ந்து நடந்தது. பொறுமை கொண்டு யாரேனும் இடையூறு செய்வாரோ என்று நினைந்து, நாள்தோறும் நீதிபதி வந்திருந்து கவியரங்கைச் சிறப்பித்தார். அரங்கேற்ற முடிவிலே அன்றுடும் தமது மகிழ்ச்சியைக் கவி மூலம் அறிவித்தும் வந்தார். ஒரு கவியிலே வினவுகின்றார், "ஈசரே! விதவிதமான பாமாலைகளை நீர் தரித்திருப்பீர். அவற்றிலே எதுவும் இந்தக் காழிக் கோவையைப் போல் உண்டா? நீதிபதி நாம்; நம்முன் உண்மையைச் சொல்லும்; அதுவும் சத்தியமாகச் சொல்லும்." இந்தப் பொருள் பொதிந்த பாடல் இது:

விதி எதிரில் அரி முதலோர் புகல் புகலி ஈசரே! விண்ணோர் மண்ணோர்
துதி பொதி பல் பாமாலை பெற்றிருப்பீர்; மீனாட்சிசுந்தரப்பேர்
மதி முதியன் கோவையைப்போல் பெற்றீர் சொல்! இக்காழி வைப்பின் நீதி
அதிபதி நாம் என அறிவீர்: நம் முன்னம் சத்தியமாஅறைகு வீரே.

இதைக் கேட்ட மகாவித்துவான், அவருடைய அன்புடமையை வியந்து,

நாட்டுக்கு நல்ல குளத்தூர் வேதநாயகநன் நாமமாலே!
வீட்டுக்கு வாயிலெனும் காழிக்கோவை எனை விளம்பச் செய்தே
ஏட்டுக்கும் அடங்காத துதிகவிகள் சொற்றனே; நின் இயற்பாட்டுள் ஓர்
பாட்டுக்கு நான் செய்த தொன்றோ பல் செய்தாலும் பற்ரு அன்றே.

என்று, விற்பன்னருடைய கவிகளின் எளிமை இனிமைகளைப் புகழ்ந்து கொண்டாடினர். கோவை நூலும் அரங்கேறியது. கூடியிருந்த பிரபுக்களும் பரிசுகள் வழங்கியும் பொன்னுடை போர்த்தும் மகாவித்துவானை மகிழ்வித்தார்கள்.

# நண்பர்கள்

## 2. பண்டாரச் சந்நிதிகளுடன்

**சைவாதீனங்கள் :**

நமது சென்னை ராச்சியத்திலே, பெரியதும் சிறியதுமாகிய இந்து சமய அறநிலையங்கள் (கோயில் மடங்கள் முதலிய) 28,620. இவற்றுக்குச் சொந்தமான நிலபுலங்கள் 8 லட்சம் ஏகர்; வருட வருமானம் 3½ கோடி.

சமய ஞானத்தைப் பரப்புவதற்கென்றமைந்த இந்தத் தருமத்தாபனங்களிலே, மிகப்பெரியது திருவாவடுதுறை ஆதீனம். ஆதீனத் தலைவர்களை மகா சந்நிதானம் அல்லது பண்டாரச் சந்நிதிகள் என்று சொல்லுவது மரபு. இவர்கள், கயிலாய பரம்பரையிலே வந்த நந்தி தேவர் மரபினர் என்று தங்களைச் சொல்லிக் கொள்கிறார்கள். மெய்கண்டான் சந்தான வழியிலே இவர்கள் வருபவர்கள்; மெய்கண்டான் யார்? அவர் கண்ட மெய் யாது? 'கடவுள் ஒருவர் உண்டு; அவரால் அருள் செய்யப் பெறும் உயிர்கள் உண்டு. அந்த உயிர்களைப் பிணித்த பாசமாகிய நோயும் உண்டு. அதனைத் தீர்க்கக் கடவுள் உயிர்களுக்கு உடம்பு கரணம் முதலியவைகளையும், உலக போகங்களையும் தருகின்றார். இன்னின்ன வகையால் கடவுளை உணர்ந்து உய்யலாம்' என்ற சித்தாந்தத்தைக் குருமரபிலே பெற்று, தமிழிலே விளக்கிய அருட்குரவர், ஸ்ரீமெய்கண்ட தேசிகர் ஆவர்; அவர் பிறந்தது

கி. பி. 1225-ல். குருவும் சீடருமாய் அவர் வழியிலே வருபவரைத்தான் மெய்கண்ட சந்தானம் என்பது. சுத்தாத்துவிதம் இவர்கள் கொள்கை. அதைப் பரப்பு வதற்கு இவர்கள் தமிழகத்திலே மடங்களைத் தாபித் தார்கள். 16-ம் நூற்றாண்டிலே சற்று முன் பின்னாக இம்மடாலயங்கள் எழுந்தன. அவற்றிலே ஒன்றுதான் திருவாவடுதுறை; மற்றது தருமபுரம். இவற்றிலே சிவவேடமும் தவவேடமும் தாங்கிய துறவிகள் தங்கிப், பரம ஞானங்களைப் பக்குவ ஆன்மாக்களுக்குப் படி முறையிலே அறிவுறுத்தி வந்தார்கள்.

ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்;

திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆதித் தலைவர், நமச்சிவாய மூர்த்திகள். இவர் மெய்கண்டான் வழியிலே ஏழாமவர். 16-ம் பட்டத்திலே 1869-முதல் எழுந்தருளியிருந்தவர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர். இவர் குறவஞ்சி ஆசிரியர் திரிகூட ராசப்பன் கவிராயர் மரபிலே வந்தவர். ஆதலின் தமிழார்வம் இயல்பாகவே உள்ளவர். தமிழ்ப் புலமையுடன் வட மொழிப் பயிற்சியும் வாய்ந்தவர்; இசை ஞானம் படைத் தவர்; சித்தாந்த சாத்திரங்களிலே தோர்ந்து தெளிந் தவர். ஆதலின் கவிஞர்களையும் கலைவாணர்களையும் இவர் அருமை தெரிந்து ஆதரித்து வந்தார். அவ்வம யம் வேதநாயகம் பிள்ளை, மாயூரத்திலே முனிசீபாகப் பதவி வகித்திருந்தார். வேதநாயகத்தின் ஒழுக்க மேம்பாட்டையும் புலமைப் பொலிவையும் நீதி பரிபாலன நேர்மையையும் பல படியாகக் கேள்வியுற்ற பண்டாரச் சந்நிதிகள் அவரைப் பார்க்க அவாவினார். அவரை அழைத்துவருமாறு தமது ஆதீன வித்துவா

ளுகிய மீனுட்சிசுந்தரம் பிள்ளையை அனுப்பினுர். மகாவித்துவானும் மாயூரம் சென்று, விற்பன்னரிடம் தேசிகர் விருப்பத்தைத் தெரிவித்தார். தேசிகருடைய ரசிகத் தன்மையையும் குண விசேடங்களையும் முன்னமே நமது முனிசீப் அறிவார். ஆதலின் இவரும் அவரைச் சந்திக்கச் சமயம் பார்த்திருந்தார். ஆனுல், அழைப்பு வந்தபோது, உத்தியோக அலுவல் நிமித்தம் அவரால், உடனடியாகப் புறப்பட முடியவில்லை; முடியாமற் போகவே செய்யுள் ஒன்றை இயற்றி அனுப்பினுர். அதன் கருத்து:

'திருவாவடுதுறை வாழ் தேசிக! மெய்ஞ்ஞான மலையே! யாவரும் புகழும் தங்கள் புலவராகிய மீனுட்சி சுந்தரம் பிள்ளை சொல்வதைக் கொண்டு, எல்லாம் தெரிந்து கொள்ளுங்கள். புலவர் என்னிடம் ஒரு பொய்யைச் சொன்னுர். என்ன என்று அதைத் தெரிவித்துவிடுகிறேன். எப்போதும் என்னுள்ளத்திலே தாங்கள் குடிகொண்டிருக்கிறீர்கள். என்னை விட்டுப் பிரியச் சற்றும் தாங்கள் சம்மதிக்கமாட்டீர்கள் என்று நான் துணிவுற்றிருக்க, என்பால் வந்த மகாவித்துவானே தாங்கள் திருவாவடுதுறையிலே இருப்பதாகச் சொல்லுகிருர். இது பொய்தானே! அவரோ மாபெரும் புலவர்; அவர் பொய் சொலவும் படித்தார் போலும்!' *

---

* விதியிருந்த பதிஎனும் சுப்பிரமணிய தேசிக! மெய்ஞ்
ஞானக் குன்றே!
துதியிருந்த நின்புலவன் சொல்வழியே பல்வழியும் தோன்
றும்; நீஎன்
மதியிருந்தாய்; பிரிந்திடவும் மனம் பொருந்தாய் என
இருந்தேன்; வான்கோ முத்திப்
பதியிருந்தாய் எனவந்த மாபுலவன் பொய்சொலவும்
படித்தான் மாதோ

கோமுத்தி - திருவாவடுதுறை.

## உன்றனையே நோக்கும் உளம் :

இந்தச் செய்தி அடங்கிய செய்யுளைக் கண்ணுற்ற தேசிகர், சமத்காரமாய் வேதநாயகம் விடுத்த பதிலுக்கு மிகவும் மகிழ்ந்தார். அந்த அருங்கலை விநோதரை நேரிலே கண்டு அளவளாவ, முன்னிலும் பன்மடங்கு ஆவல் கொண்டார்; அதனால், அவரே மாயூரம் போவது என்ற முடிவுக்கு வந்தார். அதற்குத் தகுந்தாற் போல, துலா மாதம் சூரிய கிரகணம் வந்தது. கிரகண காலத்திலே காவிரியில் நீராடத் தாமே மாயூரம் வருவதாகவும், துறவியாகியதாம் இல்லற வாசிகள் இருப்பிடத்துக்கு ஏகுதல் தகாது; ஆதலின் தாமிறங்கும் மடத்திலே வந்து தம்மைப் பார்க்க வேண்டும் என்றும் தேசிகர் வேதநாயகத்துக்குச் செய்தி அனுப்பினார்.

அதைப் பெற்ற வேதநாயகம் அதற்கு விடுத்த மறுமொழி இது; 'புலவன்தான் பொய் சொன்னான்; தேசிகர் சொல்வதோ மிகவும் விசித்திரமாக இருக் கிறது. என் மனையகத்து எங்கேபார்த்தாலும் தாங்களே வீற்றிருக்கப் பிறர் மனைபுகாப் பெருந் துறவுபூண்டாய் என்பது முழுப் பொய்தானே ! *

---

* இல்வாழ்வை நீத்துஅற மேற்கொண்டநீ, பிறர்இல்லிடத்துச் செல்வாழ்வு சற்றும் விரும்பாய் என்பர்; இது சித்திரமே !
புல்வாழ்வுடைய என் வீடெங்கும் நீபரி பூரணனாய்
நல் வாழ்வுற்றாய் ;சுப் பிரமணி யானந்த நற்றவனே !

இந்த வித்தாரப் பதிலைப் படித்து மகிழ்ந்த தேசிகர் மாயூரம் சென்றதும், தமது வருகையை வேதநாயகத் துக்குத் தெரிவிக்க மகாவித்துவானை அனுப்பினார். நற்செய்தியைக் கொண்டு வந்ததால் மகாவித்துவானை மகிழ்ந்து கொண்டாடி வேதநாயகம் வினவினார் :—

'கலைவல்ல கவிஞ! கற்றவர் சிரோன்மணியே! மாசற்ற மணி அல்லவா தேசிகர். அவரைத் தினந் தினம் தரிசிக்கத் தாங்கள் கண் செய்த தவம் யாது? அவர் சொல் கேட்கத் தங்கள் காது செய்த தவம் யாது? அவருடன் உரையாடத் தங்கள் நாத்தானும் என்னதவம் செய்ததோ? நான் அறியச் சொல்லுங்கள்; என் காது குளிரச் சொல்லுங்கள்.' [1]

மகா வித்துவானிடம் இவ்வாறு வினவிய தோடன்றி, வேதநாயகம் தமது நெஞ்சுக்கு அறிவுறுத் தியது இது; அன்று சூரியகிரகணம் அல்லவா?

'அமாவாசையும் கிரகணமும் சேர்ந்து வந்தால், இருள் அதிகமாம்; அது எங்கும் பரவும் என்று மனமே! நீ அஞ்ச வேண்டுவதில்லை. சுப்பிரமணிய தேசிகனாகிய ஞானசூரியன், இங்கே உதிப்பதால், அதன்முன் இருள் எம்மாத்திரம்? [2]

---

1. கற்றவர்சி ரோமணியாம் மீனாட்சி சுந்தரமா கலைவல் லோய்! மா
சற்றவன்சுப் பிரமணிய தேசிகனைத் தினங்காண அவன் சொல் கேட்க
மற்றவனோ டுரைகூறப் பெற்றநின்கண் காதுநா மண்ணிற் செய்த
நற்றவம் யாது? அறிதர என் கண் காது நா அறிய நவிலுவாயே.

2. குகுவும் கிரணமும் கூடலால் கங்குல்
மிகுமென்று உளமே வெருவல்—நகு துறைசைச்
செப்பரிய மாசுப்பிரமணிய தேசிகனும்
அப்பரிதி ஈங்குதித்த லால்.

தேசிகர்பால் தமக்கிருக்கும் பெருமதிப்பைத் தெரிவித்து, விருத்தமும் வெண்பாவும் பாடித், தாம் வருவதாக விற்பன்னர் த க வ ல் அனுப்பினார். தேசிகரும், 'இவர் எப்போது வருவார் ? எப்படி வர வேற்பது?' என்று துடித்துக்கொண்டிருந்தார். ஞானச் செல்வர் ஆகிய சிவநேசரைத் தரிசிக்கின்றோம் என்ற தாகத்துடன் வேதநாயகமும் மகாவித்துவானுடன் வந்து சேர்ந்தார். ஞான தேசிகர், கலாரசிகர், மகா வித்துவான்—மூவர் சந்திப்பிலே ஒருவர்க்கொருவர் வழங்கிய உபசாரங்கள், அவர்கள் உரையாடலிலே வீசிய அறிவுச் சுடர்கள், மின்னிய கலைச் சோதிகள் எத்தனை எத்தனையோ ? அவற்றிலே ஒன்று :

வேதநாயகம் வினவினார், அதுவும் ஒரு விருத் தத்திலே. 'சுப்பிரமணிய தேசிக ! மா தவத்தராகிய தாங்கள் எங்கே ? இந்த ஆதவன் (-சூரியன்) எங்கே? சூரியன் உவர்க்கடலிலே மூழ்குகின்றான் ; கீழ்த்திசை யிலே தோன்றுகின்றான் ; சுடுகின்றான் ; அடுத் தோரை (-மதி-சந்திரனை) அழிக்கின்றான் ; அத்தமிக் கின்றான் ; ஆனால் ஞான பானுவாகிய தாங்களோ மேல்திசையிலே தோன்றுகின்றீர்கள். யாவர்க்கும் நிழலாக நிற்கின்றீர்கள் ; அ டை ந் த வ ர் மதியை (-அறிவை) விரிவாக்குகின்றீர்கள் ; ஞானக்கடலிலே மூழ்குகின்றீர்கள். அத்தமனம் என்பது எந்நாளும் தங்களுக்கு இல்லை ' *

---

* மாதவச்சுப் பிரமணிய தேசிக ! மே லோய் ! உவர்ப்பு வாரி
மூழ்கும்
ஆதவன் கீழ்த் திசை உதிக்கும் ; சுடும் ; அணுகும் மதி
அழிக்கும் ; அத்த மிக்கும்
சாதக மேல் திசை உதிப்பாய் ; நிழல் அளிப்பாய் ; மதி
அளிப்பாய் ; தரணி மீது,
போதகுணக் கடல்படிவாய் ; அத்தமியாய் ; உனைக்கதி
ரோன் பொருவான் அன்றே.

வாரி—கடல் ; மேல் திசை உதிப்பாய் என்றது, மாயூரத்துக்கு மேற்குத் திருவாவடுதுறை என்பதைக் கருதி.

இதற்கு ஞானதேசிகர் விடை ஒரு வெண்பாவிலே வெளியாயிற்று : 'குமுதமலர் சந்திரனையே நோக்கும்; சமய குரவர் மனம் ஞான நூலையே நோக்கும்; அது போல, வேதநாயக! தங்களையே பற்றி நிற்கிறது எமது மனம் ? [1]

வினாவும் விடையுமான இருவர் கவிகளையும் கேட்டுக் கொண்டிருந்த மகாவித்துவான் சும்மா இருப்பாரா ? இருவர் கவிகளையும் உறைத்து மாற்றுக் காணுகிறார். 'முதன்மை வாய்ந்த முனிவரே! குளத் தூர் வேதநாயகம் ஒரு கார்மேகம்; அது பொழியும் பாமழைமுன், பாடவல்ல பாவாணர் பாவினங்களே தலைகாட்டா; தங்கள் புகழ்முன் ஏனையோர் புகழ் எம்மாத்திரம் ? அதுபோல,' [2] என்று, ஏற்றத் தாழ் வின்றி, மகாவித்துவான் இருவரையுங் கொண்டா டினார்.

---

1 இந்து வினை நோக்கும் எழிற்கை ரவம்; ஏக தந்து வினை
நோக்கும் சமயிமனம்—முந்துலகில்
நன்றமையும் நீதி நல வேத நாயகமால்
உன்றனையே நோக்கும் உளம்.

2 கூடு புகழ்மலி திருவா வடுதுறைச் சுப்பிரமணிய குரவர் ஏறே !
பீடு மலி வளக் குளந்தை வேதநாயக மேகம் பெய்யும் பாமுன்
பாடு திறலாளர் பா, உயிர்முன் குற்றியலுகரம் படும்பா டெய்தும் ❋
நீடு திறல் நின் புகழ்முன் ஏனையோர் புகழ் போலாம் நிகழ்த்தல் என்னே

1 இந்து—சந்திரன் ; கைரவம்—குமுதம் ; தந்து—நூல்

2 நாடு + அழகிது = நாடழகிது—நிலைமொழி ஈறு உகரம் ஓடிவிடுகிறதல்லவா? அதுபோலக் கவிஞர் ஓடுவர் என்பது கருத்து—

## சான்று எவரோ?

பண்டாரச் சந்நிதிகள் மீண்டும் நமது விற்பன்னருடன் அளவளாவ விரும்பினர்; தமது பண்டியை அனுப்பி அதிலே வருமாறு வேண்டினர். அன்று வியாழக்கிழமை; மறுநாள் வெள்ளி-மேற்கே சூலம்; ஆதலின், சனியன்று காலையிலே திருவாவடுதுறைக்கு வருவதாகச் செய்தி அனுப்பினார். அந்தச் செய்தி அமைந்த செய்யுள் இது:

போதமுறுசுப் பிரமணிய புனித; நின்பால் வருவதற்கு
வேத வியாழன் ஆகாதாம்; வெள்ளி மேற்கே சூலமாம்.
ஆதலாலே, திரவாரம் அருணோதயம் ஊர் ஆவலுடன்
சீதமலரை நாடிவரும் தேன்போல் வருவேன் திரமிதுவே.

அவ்வாறே சனி காலையில், மலரை நாடும் வண்டு போல மகா சந்நிதானத்தைச் சென்று தரிசித்தார்; அவரைத் தரிசிக்கத் தவித்துக் கொண்டிருந்தாராம். மழையைப் பார்க்கும் பசும்பயிர், தாய்முகம் நோக்கும் சேய், கதியைக் கருதும் அடியார் தவிப்பு எம்மாத்திரம் என்கிறார். அதற்குக் காரணமும் காட்டுகிறார். தேசிகர் கல்லாத கலை இல்லையாம்; அனைத்தையும் அவர் அறிவாராம். ஆதலின், அவரைப் புகழாத புலவர் இல்லை. அவர் குணக்குன்று; அவரைப் பாராட்டாத பார்த்திபர் இல்லையாம் *

---

* நீர் நாடு வளத்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய நிமல! கேண்மோ
கார்நாடும் பைங்கூழ் போல், கதிநாடு தொண்டர்கள் போல் கமழா நின்ற
தார்நாடும் மதுகரம் போல் தாய்நாடு சேயினைப் போல் தயையின் மிக்க
சீர்நாடும் நின்சமுகம் நேர்நாடி வந்தனன் யான் தெரிந்து கொள்ளே.

வேதநாயகம் வெறும் புகழ்ச்சியாய்ப் புகல்பவர் அல்லர்; உபசாரமாய் முகமன் மொழிகிறவரும் அல்லர்; வஞ்சகமாய் வாழ்த்துகிறவர் அல்லர். இதற்குத் தேசிகருடைய பதில் என்ன? வேதநாயகத்தின் நட்புக் கரும்பை அடியிலிருந்தல்ல நுனியிலிருந்து தின்னுவதைப் போல்வதாம். நாட்செல நாட்செல தெவிட்டாது இனிப்பதாம். பிறைமதி போலப் பெருகி நிலவுவதாம். அவருடைய சல்லாபம் சாதுரியமானது, மதுரமானது. பொழுது போவதே தெரியாது; செவி உணவாம் அது; பசி தோன்ருது; அவருடன் பேசிக் கொண்டே இருக்கலாம். அவருடைய சொல் புதிது; பொருள் புதிது; சுவை புதிது. *

சமயக் குரவரும் நீதிபதியுமாகிய இவர்கள் வெவ்வேருன மதத்தைச் சார்ந்தவர்கள்; என்ருலும் தமிழர்

---

[76-ம் பக்கம் தொடர்ச்சி]

நல்லார்தம் இதயமலர் தனில்வளர்சுப் பிரமணிய நல்லோய்! நீதான்
கல்லாத நூல் இல்லை; நீ காணுத பொருள் இல்லை; பல்கவிஞர் நின்மேல்
சொல்லாத பா இல்லை! நின்துதியாத மன்னரிலை; தூய நின்கண்
இல்லாத குணம்இலை; ஆயிரநா ஆனுலும் உன்சீர் இயம்பல் பாற்ரே.

---

* அன்றுகண் டனம்நினை; அதனினும் இனிதமைந்தது
இன்றுகண் டனம்ஆதலின், அஃது இருங்கழை நுனியே
நன்று நீபுரி நீதியின், நயந்துமே நாளும்
வென்று மேம்படு வேதநாயக விறல் வேளா.

அரியபுகழ் பெறும்வேத நாயகமா மகிபாலற்கு அமைந்த வாக்கின்
பிரியமிகு சுவைஅறிஞர் செவியுணவு கொளுந்தோறும், பேசெஞ் ஞான்றும்
உரியவயிற் றுணவொழித்து வள்ளுவர்தம் சொற்பொருள் வற்புறுத்தும் என்னில்
ஏதரிய அஃது இச்சுவையது இத்தகையது என்றெடுத்து யாம் செப்பலாமே.

கள். இவர்கள் கலந்து உறவாடுவதற்குச் சமயபேதம் குறுக்கிடவில்லை. இருவரும் கலை விநோதர்கள். இவர்கள் அளவளாவி மகிழ்ந்தபோது, அந்தக் குழுவிலே சூரியமூர்த்தியா பிள்ளை இருந்தார். மகாவித்துவானும் இருந்தார். சூரிய மூர்த்தியா பிள்ளை ஒரு டிப்டிக் கலெக்டர். கலெக்டர் என்றால், அந்த நாளிலே கேட்கவா வேண்டும்? சருவாதிகாரிதான்; விற்பன்னருடைய விநய வார்த்தைகளும், ஞானதேசிகருடைய அருளுரைகளும், இவர்கள் உரையாடுவதைப் பார்த்தும் கேட்டும் பரவசப்பட்டிருக்கும் கலெக்டருடைய பரிவும், மகாவித்துவானை மகிழ்வித்தன. மகாவித்துவானுக்கோ எப்போதும் விற்பன்னருடைய ஆசுகவிகள் மதுரகவிகள் வித்தார கவிகளில் ஈடுபாடுண்டு. ஆதலின் 'கவிபாட வல்லார் ஒருவரே. அவர் வேதநாயகம். சூரியமூர்த்தி இவருடைய அதுலக வித்துவ சத்திக்குச் சாட்சி' என்ற கருத்தமைந்த செய்யுள் ஒன்றை அக்கணமே உரைத்தார். *

## ஊர்வந்து சேர்ந்தேன் என்றன்
## உளம் வந்து சேரக்காணேன் :

தேசிகரிடம் விடைபெற்று வேதநாயகம் அன்று மாலையே மாயூரம் திரும்பினார். ஊர் சென்று சேர்ந்தமையை அறிவித்துத் தேசிகருக்கனுப்பிய அருங்

---

மாமேவு புகழ்த்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய வள்ளல் கோமான்
பாமேவு சந்நிதியில் பாக்கள்பல செய்துடனே பயிலச் செய்தான்
நாமேவு வேதநாயக சுகுணன்; சான்றுளவரோ நவிறி என்னில்
கோமேவு பலர்புகழ் சூரியமூர்த்தி மன்னன் இது குறித்துக் கொள்வீரே

கவியைப் பாருங்கள். மறுபடியும் எப்போது தேசிகரைத் தரிசிக்கலாம் என்று அதிலே மனம் ஏங்குகிறுர். வண்டியிலே அமர்ந்தது, பதினைந்து மைல் பிரயாணம் செய்தது, எதையும் அவர் உணரார். திருவாவடுதுறையிலேயே அவர் மனம் தங்கிவிட்டது. தங்கள் சந்திப்பை நினைந்த விம்மிதத்திலும், தேசிகர் பண்பை நினைந்த வியப்பிலும், வழி முழுவதும் கழிந்ததால், 'ஊர்வந்து சேர்ந்தும் என்றன் உளம்வந்து சேரக் காணேன்' என்கிறுர். இந்தக் கவிகளிலே எத்துணை ஆற்றுமை!

சுருதிஓர் உருக்கொண் டன்ன சுப்பிரமணிய மேலோய்!
கருதிஇன் ஞெருகால் உன்னைக் காணலாம் எனும் அவாவால்
பொருதிஎன் மனம்பின் ஈர்க்கப் பொறையுறும் பண்டிபூட்டும்
எருதுகள் முன்னே ஈர்க்க என்பதி அடைந்தேன் நானே.

சூர்வந்து வணங்கும் மேன்மைச்சுப் பிரமணிய தேவே!
நேர்வந்து நின்னைக்கண்டு நேற்றிராத்திரியே மீண்டேன்
ஊர்வந்து சேர்ந்தேன் என்றன் உளம்வந்து சேரக்காணேன்
ஆர்வந்து சொலினும் கேளேன் அதனைஇங் கனுப்புவாயே.

## சிபாரிசுக் கவிகள்:

1876-ல் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை காலமான பிறகு அவர் மகன் சிதம்பரம்பிள்ளை குடும்ப பாரம் தாங்கமாட்டாமல் வறுமையிலே வீழ்ந்து வருந்தினுர். அது தெரிந்து வேதநாயகம் பரிவுகூர்ந்து தேசிகருக்கு ஐந்து பாடல்களை எழுதி அனுப்பினுர்.

மகாவித்துவான் மண்ணுலகிலே மறைந்தாலும் அவர் நம்மனத்திலே இருக்கிறுர்; அவரை நாம் மறக்கக்கூடுமா? அவர் மைந்தனைப் பஞ்சம்பற்றலாமா?

கந்தனை நேர் சுப்பிரமணி ஐய ! கவிஞர் எலாம்
வந்தனை செய்தற் குரியன், பெரியன் ; மண் வாழ்விட்டு என்
சிந்தனை வாழ்பவன் மீனாட்சி சுந்தரச் செல்வன் என்பான்
மைந்தனை நிந்தனைப் பஞ்சம் உருவண்ணம் வாழ்வருளே.

பாவிற் பெரியவன் மீனாட்சி சுந்தரப் பாவலனே
தாவிற் பெரியவன் அவன்சேய் ; நினைக்கதைத் தான் உரைக்க
நாவிற் பெரியவன் நான் ; என்சொல் கேட்டு நலம்புரியப்
பூவிற் பெரியவன் நீ ; சுப்ரமண்ய புரவலனே.

இந்தக் கவிகளைக் கண்ணுற்ற தேசிகர், சிதம்பரம் பிள்ளையை வருவித்து அவருக்கு வேண்டும் உதவி களைச் செய்தனுப்பினார். சிதம்பரம் பிள்ளைக்கு ஆங்கி லத்திலே சிறிது பயிற்சி உண்டு. வேலையின்றி அவர் அவதிப்படுவதை அறிந்து, மாயூரத்திலே டிப்டிக்-கலெக்டராயிருந்த முருகேசம் பிள்ளையிடத்திலே நமது விற்பன்னர் சிபாரிசு செய்து, கப்பூரிலே கணக்கு வேலைகிடைக்கும்படி செய்வித்தார். இவரிடம் இத்தகைய உதவிகள் பெற்றவர் பலர்.

வீரபத்திரன் என்பவர் ஓர் ஆசிரியர். இவர், வேதநாயகம் பிள்ளை வீட்டிலே அவர் குழந்தை களுக்குக் கல்வி கற்பித்து வந்தார். இவருக்கு ஒரு சமயம் டிப்டிக்-கலெக்டர் சூரியமூர்த்தியா பிள்ளையின் தயவு வேண்டியிருந்தது. அதன் நிமித்தம், வேதநாயகம் தேசிகருக்குச் சிபாரிசுக் கடிதம் எழுதி னார். அதிலே கண்ட கவி இது.

வான்நாடு மண்நாடு மலிபுகழ்ச் சுப்பிரமணிய வள்ளலே ! நின்
பால்நாடு மாவீர பத்திரவேள் எனக்கினியன் பாலர்க் காசான்
தான்நாடுந் தொழில் உறுவான் சூரிய மூர்த்திச் செல்வன் தனக்கோர் மாற்றம்
தேன்நாடுன் திருவாக்கால் செப்பில் மனோபீட்டம் எல்லாம் சித்தியாமே.

கோபாலையர் என்பவருக்குத் திருவாவடுதுறை யிலே நிலம் இருந்தது. அதை விற்க அவர் கருதினார். நல்ல விலை கொடுத்து, அதை வாங்கக் கூடியவர் தேசிகர் ஒருவர்தான் இருந்தார். அதன் நிமித்தம், தேசிகர்பால் சேர்ப்பிக்குமாறு கோபாலையரிடம் வேத நாயகம் கொடுத்த சிபாரிசுக் கவிகளைப் படியுங்கள். 'மலரை வண்டு மறக்குமா? சூரியனைத் தாமரை மறக்குமா? புலவர் தமிழ்ப் பாடலை மறப்பாரா?

கோவை மறைப் பொருளை எலாம் உணர்ந்திடுஞ்சுப் பிரமணிய குருவே! வண்டு
பூவை மறப்பினும், வறியர் பொன்னை மறப்பினும், தமிழல்நூல் புலவர் எல்லாம்
பாவை மறப்பினும், கமலம் பகலை மறப்பினும், நேசம் பழுத்த தொண்டர்
தேவை மறப்பினும், நினது சேவை மறப்பறியாது என் சிந்தை தானே.

பொறை நிறை வாய்மை தூய்மை புண்ணியம் முதல் யாவிற்கும்
உறையுளாம் சுப்பிரமணிய உத்தமா! ஈதல் அன்றி
இறையுங் கொள்ளா நினக்கொன் றீந்திடக் கோபாலப்பேர்
மறையவன் வருகின்றான்; நீ மனமகிழ்ந் திசைதல் நன்றே.

# ஆங்கிலமுந் தமிழும்

## சமஸ்கிருதக் கல்வி :

இந்தியாவுடன் வணிகம் புரியவந்த ஆங்கில வியாபாரக் கம்பெனியார், நாடு முழுவதையும் கட்டி ஆளத் தலைப்பட்டது, உலக சரித்திரத்திலேயே ஒரு அதிசய சம்பவம். இந்தியாவிலே ஆங்கில ஆதிக்கம் பரவி வந்தபோது, இந்திய மக்களுடைய அன்பையும் ஆதரவையும் பெறவேண்டுமே அதன் நிமித்தம், இந்தியருக்கு மிக இனிய அரபி சமஸ்கிருதக் கலை நாகரிகங்களை வளர்ப்பதிலே கம்பெனி அதிகாரிகள் முனைந்து நின்றனர். மேலும், தேச நிர்வாகம் நடை பெற வேண்டாமா? அதற்கு இந்திய அதிகாரிகள் தேவைப் பட்டனர். அரபி சமஸ்கிருதக் கலைகளிலே பயிற்சி கொடுப்பதன் மூலம், தேவையான அதிகாரி களுடன், அவசியமான இந்தியர் அபிமானத்தையும் பெறலாம் அல்லவா? ஆதலின், வாரன் ஹேஸ்டிங்ஸ் தம்முடைய சொந்த முயற்சியில் காளிகோட்டம்— கல்கத்தாவிலே 1780-ல் மதராசா ஒன்றை நிறுவினர். அரபி பாரசீகக் கலைகளிலே பயிற்சி கொடுப்பது அதன் குறிக்கோள். அதன்பின், 1791-ல் காரன் வாலிஸ் காலத்திலே சமஸ்கிருதக் கலையை வளர்ப்பதற் கென்று காசியிலே ஒரு கல்லூரி எழுந்தது. 1911-ல் மிண்டோ பிரபும் சமஸ்கிருதப் பயிற்சியின் முக்கியத் துவத்தை வலியுறுத்தி, அதனை வளர்க்க முற்பட்டார். இந்தக் காலங்களிலே, கம்பெனி சர்க்காரில், ஆங்கில மொழிப் பயிற்சி அல்லது, ஐரோப்பியக் கல்வி

முறை என்ற பிரஸ்தாபமே பெறவில்லை அரபி சமஸ்கிருதக் கல்வி முறைக்கே சர்க்காரில் ஆதர விருந்தது.

## ஆங்கிலமொழி வாதம்:

சில காலத்திலே, ஆட்சி பீடமான கல்கத் தாவிலே, நாகரிகக் கலப்பால் வங்காளிகளிடையே ஒரு புதிய உணர்ச்சி ஓங்கியது. ஆங்கில மொழியின் முக்கியத்துவத்தை அவர்கள் வற்புறுத்தினார்கள். ராசாராம் மோகன் ராயை நீங்கள் அறிவீர்கள். வங்க மொழியிலே இவர் புலவர்; சமஸ்கிருதத்திலே பண்டிதர்; ஆங்கிலத்திலே அறிஞர். ஆதி சீர்திருத்த வாதி. ஒரு சமயம் இவர் சாட்சியம் அளிக்கையிலே, வங்காளிகளில் மூன்றி லிரண்டு பங்கினர் தங்கள் குழந்தைகள் ஆங்கிலம் பயிலவே அவாவுகின்றனர் என்றார். இந்தக் கால எல்லையிலே கல்விபற்றி ஒன்றுக் கொன்று முரண்பட்ட இரண்டு கருத்துக்கள் நாட்டிலே நிலவின. ஒன்று அரபி சமஸ்கிருதக் கல்வி ஆகிய கீழ்த்திசைக் கலை ஞானங்களை வளர்ப்பது; இந்த வைதிகக் கொள்கை சர்க்காரிலே ஆதிக்கம் பெற்றது. மற்றது ஆங்கிலமொழி யறிவிலே இந்தியரைப் பயிற்று விப்பது. ஆரம்பத்திலே இந்த ஆங்கிலவாதிகளுக்குச் சர்க்காரிலே செல்வாக்கில்லை. வைதிகர் கை ஓங்கி இருந்தது. ஆங்கிலவாதிகள், அரபி சமஸ்கிருத நூல் களிலே உள்ள சிறந்த கருத்து, மேலான கற்பனை

---

I may be fully justified in saying that two thirds of the native population of Bengal would be exceedingly glad to see their children educated in English learning.

களையுமே பரிகசித்து வந்தார்கள். இவற்றைப் பரப்புவது மிருக மிலேச்சத்தனங்களை வளர்ப்பது என்றார்கள். ஐரோப்பிய அறிவை ஆங்கிலமொழி மூலம் கொடுப்பது இவர்கள் கொள்கை. இவர்களிலே குறிப்பிடத் தகுந்தவர் டிரிவிலியன்[1]. கல்வித் துறையிலே இவ்வாறு ஆங்கில வைதிக வாதங்கள் கடுகி வளர்ந்தன.

## தாய்மொழி வாதம் :

கடுகி வளர்ந்த இந்த வாதங்களிடையே தாய்மொழி வாதம் ஒன்று தலை எடுத்தது. இதன் தலைவர் வில்கின்சன்[2] பாமர மக்களிடையே கல்வியைப் பரப்புவது அரபி சமஸ்கிருத மொழிகளால் முடியாது; ஆங்கிலத்தால் கூடாது. தாய்மொழி ஒன்றன்மூலந்தான் அது சாத்தியம்; அதுதான் தக்கது என்ற உண்மையை, சேகூர் என்ற இடத்திலே கலாசாலை நிறுவிப் பல பரிசோதனைகள் மூலம் அனுபவத்தால் அறிந்தவர். சமஸ்கிருதச் சொற்களின் துணைகொண்டு தாய்மொழியை வளம்படுத்தி, அதன்மூலம் ஆங்கில விஞ்ஞான அறிவுகளை வெளியிட்டுக் கல்வி புகட்டுவது என்ற கோட்பாட்டை, அவர் 1834ல் வெளியிட்டார். பம்பாய் மாகாணத்திலே எலிபென்ஸ்டன் கவர்னராயிருந்தபோது 1821-27ல் இந்த தாய்மொழிக்கொள்கை அவரால் அமுல் நடத்தப்பட்டது. உயரிய கணிதம், இயற்கை, மருத்துவம் போன்ற நூல்கள் மராத்தி, குசராத்தி மொழிகளிலே 1823-ம், 26-ம் ஆண்டுகளில் பெயர்க்கப்பட்டு, பொறி இயல், மருத்துவக் கல்லூரி

---

1 Trevelyan

2 Wilkinson - Political Resident at Bhopal.

களில் தாய்மொழிமூலம் போதிக்கப்பட்டன. ஆதலின், பம்பாய் தாய்மொழிக் கொள்கைக்கு வளர்ப்புப் பண்ணை; ஆங்கிலவாதத்துக்கு வங்காளம் நிலைக்களன்; மத்தியப் பிரதேசத்திலே வைதிகவாதம் வளர்ந்தது. சென்னையில் எந்தவித மொழிச் சிக்கலும் எழவில்லை. பாதிரிகள் அமைதியாக ஆங்கிலத்தைக் கற்பித்து வந்தார்கள்.

## ஆங்கிலத்தின் வெற்றி:

ஆங்கில வைதிக வாதப் போர்களிடையே தாய் மொழி வாதம் தலை எடுக்கவில்லை. சர்க்கார் கல்வி ஆலோசனை சங்கத்திலே ஒரு சமயம் பத்துப்பேர் அங்கத்தினர் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் ஆங்கிலரே. ஆங்கில வாதப் பிரதிவாதங்கள் மலிந்து விடவே, இவர்கள் சமபலத்துடன் கட்சி பிரிந்து நின்றார்கள். அதனால் சங்க நடபடிக்கைகள் தம்பித்து நின்ற சந்தர்ப்பங்கள் பல. கவர்னர் ஜனரலின் ஆலோசனைக் குழுவுக்கு இந்த விஷயம் கொண்டு போகப்பட்டது. அப்போது அதிலிருந்த மெக்காலே பிரபு, 1934 மார்ச்சு மாதம் 7-ம்தேதி ஒரு தீர்ப்புக் கூறினார். இந்தத் தீர்ப்பு நமது கல்வி வரலாற்றையே மாற்றி அமைத்தது. மெக்காலே ஆங்கிலவாதி; இவருடைய கொள்கைகள்—இந்திய மொழிகளில் அமைந்த இலக்கியங்கள், பொய்யும் புளுகும் புனை சுருட்டுமே; யதார்த்த நெறி அவற்றிலே இல்லை. இதிலே உண்மை காண முயல்வது, வைக்கோல் போரிலே ஊசி தேடுவதை ஒக்கும். இந்தியர் சாத்திரங்கள் முன்பின் முரண்பட்ட பிதற்றல்கள். சட்டங்களும் முட்டாள்தனமானவை; தத்துவ

நூல்கள் அபத்தம்; விநோதமும் வேடிக்கையுமான கொள்கைகளைக் கொண்டவை. மருத்துவம் உயிர் வதை; அறநூல்களிலும் அறம் இல்லை. கொலையும் புலையுந்தான். விஞ்ஞான அறிவோ சூனியம். ஒழுக்க நெறி வலியுறுத்தப்படவில்லை. இந்தக் கொள்கைகளை யுடைய மெக்காலேயின் தீர்ப்பு வைதிகக் கல்விக்கு விரோதமாக இருந்தது. அதனால், வைதிகக் கல்வி நிலையங்களுக்கு இதுவரை இருந்துவந்த சர்க்கார் ஆதரவு நின்றது. அவற்றுக்கு மாறாக ஆங்கில கலா சாலைகள் எழுந்தன. 1851ல் பல்கலைக் கழகங்கள் தோன்றின. கல்லூரிகள் வளர்ந்தன.

## தமிழ் தாழ்ந்தது :

'அறிஞர்க்கு ஆங்கிலம்; பாமரர்க்குத் தாய் மொழி. ஆங்கில மொழி அறிவு வளர்வதால் பரவும் கலை ஞானத்திலே, தாய்மொழி தானாக வளரும் என்ற ஆ ங் கி ல வா தி க ள் முடிவு சமஸ்கிருதத்துக்குப் போலவே, தமிழுக்கும் விரோதமாக அமுல் நடத்தப் பட்டதால், ஒரு தலைமுறையிலேயே,

ஆங்கிலம் ஒன்றையே கற்றார்—அதற்கு
ஆவியோ டாக்கையும் விற்றார்
தாங்களும் அந்நியரானார்—செல்வத்
தமிழின் தொடர்பற்றுப் போனார்.

19-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலே சமஸ்கிருதப் பயிற்சி தழைத்தது. இடைக் காலத்திலே ஆங்கில அறிவு ஓங்கியது. மேலேகூறிய சர்க்கார் கொள்கை களால், தாய்மொழிகளுக் காதரவில்லாமற் போகவே, தமிழ் தாழ்ந்தது. ஒரே தலைமுறையில் இது நிகழ்ந்தது.

வேதநாயகம் பிள்ளை தம் இளமையிலே, தாமாக வருந்தித் தமிழுடன் ஆங்கிலம் பயின்றார்; ஆங்கில மறிந்தவர் அப்போது அருமை. பத்து வருடத்திலே இவர் உத்தியோகம் வகித்தபோது, கல்விமான்கள் தமிழைக் கைவிட்டார்கள். ஆங்கிலத்திலே எழுதவும் பேசவும்தெரிந்த அளவிலேயே, அதில் தேர்ந்த புலமை அடைந்தார் போலத் தங்களை மதித்தார்கள். தமிழைப் படிப்பதும் தமிழிற் பேசுவதும் கௌரவக் குறைவான காரியம் என்று கருதினார்கள். தாய்மொழிப் பற்றுடன் தேசபக்தியும் அவர்களிடம் அற்றுவிடவே, நமது நாட்டை இகழ்வதும் நாகரிகத்தை நகையாடுவதும், ஐரோப்பா நாடுகளைப் புகழ்வதும் அவர்களுக்கு அன்றாடும் பொழுதுபோக்கு. இவர்கள் தொகை பெருகவே, 'மெல்லத் தமிழ் இனிச்சாகும்' என்ற சூழ்நிலையில் வேதநாயகம் மனம் நொந்து வருந்து கிறார்; அவர் எழுதுகிறார்:

தமிழருமை:

'எண்ணிறந்த தேவாலயங்களும், பிரமாலயங் களும் அன்ன சத்திரங்களும், நீர்வளமும் நிலவளமும் நாகரீகமும் ஆசார நியமங்களும் நிறைந்த இந்தத் தமிழ்நாடு, மற்றைய நாடுகளிலும் விசேடம்; அப்படியே தமிழ்மொழியும் மிகவும் மேலானமொழி என்று சகலரும் ஒப்புகிறார்கள்.

'அகத்தியன் நாவிலே பிறந்து, ஆரியத்தின் மடியிலே வளர்ந்து, ஆந்திரம் முதலிய மொழிகளின் தோழமை பெற்று, சங்கப் புலவர்களுடைய நாவிலே சஞ்சரித்து, வித்துவான்களுடைய வாக்கிலே விளை யாடி, திராவிட தேசம் முழுவதும் ஏகச் சக்கிராதி

பத்தியம் செலுத்திவந்த தமிழ் அரசியை, இப்போது இகழலாமா ? நம்மைப் பெற்றதும் தமிழ் ; வளர்த்ததும் தமிழ் ; நம்மைத் தாலாட்டித் தூங்க வைத்ததும் தமிழ் ; நம்முடைய மழலைச் சொல்லால், நமது தாய் தந்தையாரை மகிழ்வித்ததும் தமிழ் ; நாம் குழந்தைப் பருவத்திலே பேச ஆரம்பித்தபோது, முந்தி உச்சரித்ததும் தமிழ். நம்முடைய அன்னையும் தந்தையும் நமக்குப் பாலோடு புகட்டினதும் தமிழ் ; ஆதிகாலம் முதல் நம்முடைய முன்னோர்கள் எல்லோரும் பேசியதும் எழுதியதும் தமிழ். இப்போதும் நம்முடைய மாதா பிதாக்களும் மற்றவர்களும் பேசுகிற மொழி தமிழ். வீட்டு மொழியும் தமிழ் ; நாட்டு மொழியும் தமிழ்.

## சமஸ்கிருதமா ?

'இத்தகைய அருமையான மொழியை விட்டு விட்டு, சமஸ்கிருதம் லத்தீன் முதலிய அந்நிய மொழிகளைப் படிக்கிறவர்கள், சுற்றத்தார்களை விட்டு விட்டு அந்நியர்களிடம் நேசம் செய்கிறவர்களுக்குச் சமானம். ஆபத்திலே சுற்றத்தார் உதவுவார்களே அல்லது, அந்நியர் உதவார் ; அப்படியே எந்தக் காலத்திலும் நமக்குத் தாய்மொழி உதவுமே அல்லாமல் அந்நிய மொழி உதவுமா ? லத்தீனுக்கும் சமஸ்கிருதத்துக்கும் சொந்தக்காரர் இல்லை. அவை இறந்துபோன மொழிகள். தமிழ் முதலிய சீவிக்கிறமொழி. ஒருவர் கருத்தை ஒருவர்க்கு வெளியிடுவதே பல மொழிகளைப் படிப்பதன் பயன் ; சமஸ்கிருதம் லத்தீன் படித்து யாரிடத்திலே பேசக்கூடும் ? மேலும் அவை கடினமும் வருத்தமுமான மொழிகள்; சீக்கிரத்தில் மறந்துபோகத்

தக்கவை. உரையாடலுக்கும் உலக வியாபாரங்களுக கும் உபயோகமில்லாத அந்த மொழிகளைப் பிரயாசை எடுத்துப் படித்தும் பிரயோசனம் என்ன? அவை அழகும் அலங்காரமும் பொருந்திய மொழிகள் என்பதிலே சந்தேகமில்லை. அவகாசம் உள்ளவர்கள் தாய் மொழியுடன் அவற்றைப் படிப்பது, அதிக விசேடந்தான். ஆனால் சொந்தமொழியை நன்றாகப் படிக்காமல், அயல் மொழிகளிலே காலம் எல்லாம் போக்குவது கூடாது.

## ஆங்கிலமா?

'ஆங்கிலம் பிரஞ்சு முதலிய அரசாங்க மொழி களைப் படிக்க வேண்டாம் என்று நாம் விலக்கவில்லை. ஏன் என்றால், நாம் நடக்கவேண்டிய சட்டங்களும் ஒழுங்குகளும் நியாயப் பிரமாணங்களும் அவற்றிலே இருக்கிறபடியால், அவை தெரியா விட்டால், அந்த ராசாங்கத்தை நாம் எப்படி நிர் வகிக்கக்கூடும்? அன்றியும், சன்மார்க்கங்களைப் பற்றியும், உலகத்துக்கு மிகவும் உபயோகமான பல விஷயங்களைப் பற்றியும் அந்த ராச மொழிகளிலே அனேக அருமையான கிரந்தங்கள் இருக்கிறபடியால், அவைகளைப் படிக்கப் படிக்க, அறிவு விசாலிக்கும் என்பது திண்ணமே. ஆனால், மாதா வயிறெரிய மகேசுர பூசை செய்வது போல், சொந்த மொழிகளைச் சுத்தமாக விட்டு விட்டு, ராசமொழிகளை மட்டும் படிப்பது அநுசிதம் அல்லவா?

'அநேகர், தங்கள் தாய்மொழியிலே கையெழுத் துக்களைக் கூடப் பிழை இல்லாமல் எழுத அசக்தர் களாய் இருக்கிறார்கள். சிலர் தமிழ் தெரியாமல்

இருப்பது, தங்களுக்குக் கெளரவமாகவும் கருது கிறார்கள். தாய்மொழி ஞானம் தங்களுக்கு எவ்வளவு குறைவாய் இருக்கிறதோ அவ்வளவு ராச மொழியில், தங்களைச் சமர்த்தர்கள் என்று சகலரும் எண்ணு வார்கள் என்று, நினைத்துத் தமிழை அலட்சியம் செய் கிறார்கள். அவர்கள் தமிழ்ப் புத்தகங்களைக் கையிலே தொடுகிறதாய் இருந்தால், பாம்பின் புற்றுக்குள்ளே கையை விடுவது போலிருக்கும்; தமிழ் பேசுவது வேப்பிலைக் கஷாயங் குடிப்பது போலிருக்கும்; தமிழ் வார்த்தைகளைக் கேட்பது கர்ணகடோரமாயிருக்கும். அவர்கள் தமிழ் பேசினாலும், முக்காற் பங்கு ஆங்கில மும் காற் பங்கு தமிழுமாகக் கலந்து பேசுகிறார்கள். அவர்களுக்குத் தேசாபிமானமும் இல்லை; பாஷா பிமானமும் இல்லை.

'ஐரோப்பியர் தங்கள் சொந்த மொழிகளை எவ்வளவோ கெளரவமாகப் போற்றி வருகிறார்கள் என்பதை இவர்களே அறிவார்கள். இவர்கள் மட்டும் தங்கள் தாய் மொழியாகிய தமிழையும் தமிழ் வித்துவான்களையும் அவமதிக்கலாமா? தமிழ் நூல் களையே பாராத இவர்கள், அவைகளுக்கு எப்படிப் பழுது சொல்லக்கூடும்? திருவள்ளுவருடைய குறளை அவர்கள் எப்போதாவது பார்த்திருப்பார்களா? கம்ப னுடைய கற்பனையைக் கனவிலும் கேட்டிருப்பார்களா? நாலடியார் செய்தவர்களுடைய காலடியையாவது கண்டிருப்பார்களா? ஒளவையாருடைய நீதிநூலைச் செவ்வையாக அறிவார்களா? அதிவீர ராம பாண்டியனை அணுவளவும் அறிவார்களா?

'ஆங்கிலம் பிரஞ்சு முதலிய மொழிகளைப் போலத் தமிழிலே வசன காவியங்கள் இல்லாமல் இருப்பது

பெருங்குறை யென்பதை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். அந்தக் குறையைப் பரிகரிப்பதற்காகத்தான்எல்லாரும் ராச மொழிகளும் தமிழும் கலந்து படிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். த மி ழை ப் படிக்காமல் ஆங்கிலம் மட்டும் படிக்கிறவர்கள் மற்ற சனங்களுடன் கலவாமல், தாங்கள் ஒரு அந்நிய தேசத்தார் போல சீவிக்கிறார்கள்.

## அறியாமை :

'இந்தத் தேசத்துப் பெரிய பிரபுக்கள், மிராசுதாரர் கள், முதலானவர்களுடைய அறியாமையை நினைக்கும் போது, நமக்குப் பிரலாபமும் பெருமூச்சும் உண்டா கின்றன. அவர்களிலே அநேகர் சுத்த நிரட்சரகுட்சி களாய் இருக்கின்றார்கள். சிலர், கையெழுத்துக்களை மட்டும் கற்றுக்கொண்டிருக்கிறார்கள். சுப்பிரமணியன் என்பதற்குச் சுக்கிரமணியன், சிதம்பரம் என்பதற்குச் செலம்பரம், துரைசாமி என்பதற்குத் தொறசாமி, வைத்தியலிங்கம் என்பதற்கு வயித்துலிங்கம் என்று கையெழுத்து வைக்கிறார்கள். இந்த வித்துவசிரோன் மணிகளே, ஜூரிகளாகவும், முனிசிபல் மெம்பர்களா கவும் பென்சு மாஜிஸ்ரேட்டுகளாகவும் தேவாலாய தர்மாலய விசாரணைக் கர்த்தர்களாகவும் நியமிக்கப் படுகிறார்கள். தங்கள் அதிகாரத் தானங்களுக்குப் போகும்போது இ வ ர் க ள் பிரதிமைகளைப் போல, நாற்காலிகளில் வீற்றிருக்கிறார்கள் ; அவர்களுடைய வேலை இன்னது என்பதைக் கடுகளவும் அறியார்கள். பிரதிமைகளுக்கும் இவர்களுக்கும் பேதம் என்ன வென்றால், பிரதிமைகள் அசையாமல் இருக்கின்றன; இவர்கள் நாற்காலியில் தூங்கி விழுந்து அசைந்து

கொண்டிருக்கிறார்கள். தேச மொழிகளில் தகுந்த வசன காவியங்கள் இருக்குமானால், இவர்கள் இவ்வளவு நிர்ப்பாக்கியமான நிலையில் இருப்பார்களா ? ஆதலால் ஆங்கிலம் பிரஞ்சு முதலிய ராசமொழிகளைப் படிக்கிறவர்கள், தேச மொழிகளையும் தீர்க்கமாக உணர்ந்து இந்த தேசத்தைச் சூழ்ந்திருக்கிற அறியாமை என்னும் அந்தகாரம் நீங்கும்படி, வசன காவியங்கள் என்னும் ஞான தீபங்களை ஏற்றுவார்கள் என்று நம்புகிறோம்.

'தமிழ்ப் படிக்காதவர்கள் தமிழ் நாட்டிலே வசிக்கத் தகுந்தவர் அல்லர். அவர்கள் எந்த ஊர் மொழியைப் படிக்கிறார்களோ அந்த ஊரே அவர் களுக்குத் தகுந்த இடம். ஆங்கிலம் மட்டும் படிக்கிற வர்களை பாரிஸ் பட்டணத்துக்கு அனுப்புவோம். லத்தீனுக்கும் சமஸ்கிருதத்துக்கும் சொந்த ஊர் இல்லாதபடியால், அவற்றைப் படிப்பவர்களை அநாம கரணத் தீவுக்கு அனுப்புவோம்.

# நகர் மன்றத் தலைவர்

## பழங்காலத்திலே :

நகர் மன்றங்கள் ஆங்கில வாட்சியின் வரப்பிர சாதம் என்று பலராலும் கருதப்படுகிறது. பண்டைய சோழ பாண்டியர் காலங்களிலே தற்போதைய தலத் தாபனம் போன்ற ஊர்ச்சபைகள் கிராமங்கள்தோறும் நிலவின. சபையோரும் பொதுமக்களால் குடவோலை மூலம் தெரிந்தெடுக்கப்பட்ட திறமைசாலிகள்; ஒழுக்க சீலர்கள். இவர்கள் பெருமக்கள் எனப்பட்டனர்; ஆளுங் கணத்தர் எனப்பட்டனர். இவர்கள் வரிவிதித் தார்கள்; அதை வசூலித்தார்கள்; வழக்குத் தீர்த்தார் கள். பாசனவசதி செய்தும் பாதுகாப்புத் தந்தும் இவர்கள் தமது ஆளுகையில் அமைந்த கிராமங்களைப் பரிபாலித்து வந்தார்கள்.

கிராமங்களால் கீர்த்தி அடைந்தது போலவே, நமது நாடு, நகரங்களாலும் புகழ் பெற்றது. காஞ்சி, வஞ்சி, மதுரை, புகார் போன்றவை சருவதேச நகரங் களாய்த் திகழ்ந்தன என்று சங்கநூல்கள் தெரிவிக் கின்றன. இடைக் காலத்திலே எழுந்த மாமல்லபுரம் தஞ்சை அனைய தலைநகரங்களை யாரும் அறிவர். ஆட்சி பீடமாய் இவை பிரசித்தி பெற்றதுபோலவே, மூர்த்தி தலம் தீர்த்தங்களாலும் புகழ் பெற்றன. எப்படி இவை பரிபாலிக்கப் பட்டன? இவற்றின் சுகாதார வசதி யாது? நிருவாகத் திறமை என்ன? இவற்றை நீங்கள் அறிய வேண்டாமா ?

**சாலைகள் :**

பழைய நகரங்களிலே வீடுகள், மாடங்கள், மாளிகைகள் எல்லாமே செங்கல் கட்டிடங்களே, சிற்ப முறைப்படியும் ஒழுங்கான திட்டப்படியும் தெருக் களின் இருமருங்கும் அவை கட்டப்பட்டன; கூரை குடிசைகள் விலக்கப்பட்டன. தெருக்கள் ஆறுகிடங் தாற்போல அகன்றவை; நெடியவை. அவற்றின் மருங்குகளிலே மரங்களும் மருந்துச் செடிகளும் பயிரிடப்பட்டன. இரத வீதியும் இராச வீதியும் நகரிலே முக்கிய தெருக்கள். இவற்றுடன் வணிகவழி வாகன வீதிகளும் குறிப்பிடத் தகுந்தவையே. சுடுகாடு, இராணுவ நிலையம், மேய்ச்சல் புலத்துக்குப் போகிற வழிகளுடன் நடைபாதைகளும் நல்ல முறையிலே அமைந்திருந்தன. வழியை மறித்தல் அல்லது அழிவு செய்தல் உடனுக்குடன் தடுக்கப் பட்டன; பழுது பார்க்கப் பட்டன. முச்சந்தி நாற்சந்தி களிலே விளக்குக் கம்பங்கள் நிறுவப்பட்டு, இரவிலே விளக்கேற்றப் பட்டன.

**சுகாதாரம் :**

பழைய அறநூல்களிலே நகர சுகாதாரம் பற்றிப் பயனுடைய பல முறைகள் காணப்படுகின்றன. ஆபஸ்தம்பருடைய சுகாதார விதிகளை யாரும் அறிவர்; மருந்து, பால், மாமிசங்களிலே கலப்படம் செய் பவர்க்குக் கௌதமர் கடுந் தண்டனை விதிக்கிறார். நீர்நிலைகளிலே எச்சில் துப்பக்கூடாது; சாலை வழி களிலே ஆற்றங்கரைகளிலே மலசலங் கழிக்கக் கூடாது; மீறுகிறவர் தண்டனைக் குள்ளாவர். கால்

நடைகளிடையேயும் தொத்துநோய் பரவாமல் உடனுக் குடன் தவிர்க்கப் பட்டது. அலட்சியமாய் நோய் பார்க்கும் மருத்துவர்க்கு மன்னிப்பே இல்லை.

**நிர்வாகம் :**

மக்களுடைய உயிர் உடைமைகளுக்கு நகர் மன்றே பாதுகாப்பு நல்கியது. செல்வினங்களுக்குப் பல்வேறு வரிகள் விதிக்கப்பட்டன ; அவற்றுள் சுங்க வரியே முதன்மையானது. நகர் மன்ற நிருவாகத்தை நடத்திய அதிகாரிகள் அறுவர் என்று சுக்கிர நீதி சொல்லுகிறது. அவராவர்-தலைவர், நீதிபதி, வரிக் கணக்கர், சுங்கவதிகாரி, காவலர், கரணத்தர். இவருள் தலைவரே 'நகரபிதா'. வரி வசூலிப்பவர், மரத் தினின்றும் பழம் பறிப்பவரைப்போல, ஊறுசெய்யாது, மக்களிடம் வரிவாங்கி வந்தனர். கரணத்தர் ஒழுக் கத்திலே உயர்ந்தவர்; திறமை மிகுந்தவர்; பலதேச மொழிகளிலே தேர்ந்தவர்; கணிதத்திலே நிபுணர், காவலர் (போலிசார்) பொறுப்போ அதிகம். மாறு வேடத்திலே அவர்கள் நகரைச் சுற்றித் திரிவர், குற்றவாளிகளை ஒற்றி, கள்ளுக்கடைகளிலும் சூதாடு மிடங்களிலும் மறைந்திருப்பர். சிறை செய்யவும் தண்டனை விதிக்கவும் இவர்களுக்கு அதிகாரம் உண்டு. காரணமின்றிச் சிறை செய்தல் கூடாது. அடிமைப் பெண்களிடம் தகாத விதமாக நடந்து கொள்ளும் காவலர் தண்டிக்கப்படுவர்; குடும்பப் பெண்களிடம் ஒழுக்கக்கேடு புரிந்தால் இவர்களுக்குத் தண்டனை கொலையே.

வீடுகளின் எண்ணிக்கை, அவற்றிலே குடியிருப் பவர் தொகை, அவர் தொழில் சாதி போன்ற சனத்

தொகைக் கணக்கு வைக்கப்பட்டது. நகரினின்றும் வெளியேறுபவர், அல்லது நகருள் குடிவருபவர்--இவர் களுக்கும் கணக்குண்டு; அதற்கு அனுமதியும் வேண்டும். பொது நலங்களிலே ஒத்துழைக்காத நகர் மக்கள் சமுக விரோதிகளாகக் கருதப் பட்டனர்.

## பிற்காலத்திலே :

பழைய நம் நகர பரிபாலன முறையின் சிறந்த பண்புகள் தற்போதைய நாகரிக நகரங்களிலும் இல்லை அல்லவா? நல்ல முறையிலே பரிபாலிக்கப்பட்டு மேம்பட்டிருந்த தமிழ்நாட்டு நகரங்கள் பிற்காலத்திலே பெருமை இழந்தன. உட்பகை புறப்பகைகளால் அமைதி குலைந்து அல்லல் மிகுந்து, அரசும் கைமாறிப் போனதால், வளர்ச்சி இன்றி நகரங்கள் நலிந்தன; கிரா மங்கள் சீர் கெட்டன. ஆங்கில வாட்சி நிலையாய் அமைந்தபின், தாலுகா சில்லாக்களுக்குத் தலைமையிட மான நகரங்கள் தலையெடுத்தன; இவற்றின் நலங்கருதி நகர் மன்றங்கள் தோன்றின. நகர மக்களுடைய கல்வியறிவு அரசியல் ஆர்வத்தைவளர்ப்பதற்கென்று, சுயவாட்சியிலே அவர்களைப் பயிற்றுவிப்பதற்கென்று, ஆங்கில ஆளவந்தாரால் தோற்றுவிக்கப்பட்ட நகர் மன்றங்களின் பரிபாலனத்திலே இன்று ஆறுகோடி இந்தியர் வாழ்கின்றனர். இந்த நகர்மன்றங்கள் ஐரோப்பிய மாதிரியில் அமைந்தவை.

## மாயூரம் நகர்மன்றில் :

உத்தியோகத்தினின்றும் ஓய்வடைந்த பின்னர், வேதநாயகம் பிள்ளை, மாயூரம் நகர் மன்றிலே அதன்

தலைவராய் அமர்ந்தார். நேர்மை வழுவா நீதிபதி என்று பெயர் பெற்றது போலவே, அவர், நகர் மன்றத் தலைவராயும் பெரும் புகழ் பெற்றார். மாயூரத்திலே நகர் மன்று தோன்றிய தொடக்கத்திலேயே அதன் வழிகாட்டியாய் வேதநாயகம் வீற்றிருந்தது, அதன் முன்னேற்றத்துக்குக் காரணம் ஆயிற்று.

நகர் மன்றின் தலைவர் பதவியைத் தாங்குவது எளிதல்ல; அது சுமையானது; தொல்லை தருவது. பெரிய மலையைத் தூக்கித் தலைமேலே வைத்துக் கொள்வதினும் அது வேறல்ல. பிரதாப முதலியார் மூலம் வேதநாயகம் பேசுகிறார் : ' உலகிலே உள்ள சகல பதவிகளிலும் அதிகாரங்களிலும் தலைவர் பதவி எப்படி மேன்மை ஆனதோ, அப்படியே அதைச் சார்ந்த அலுவல்களும் அபாரமாய் இருக்கின்றன. குடும்பத் தலைவன் தன் குடும்பத்துக்காக ஓயாமல் உழைக் கிறான், ஆயிர மாயிரம் குடும்பங்களுக்குத் தலைவனா யிருக்கிற நகர பிதா ஒரு கணமேனும் சும்மா இருக்க லாமா? சொற்பக் கூலி வாங்கிக்கொண்டு வேலை செய்கிறவன் அல்லும் பகலும் உழைக்கிறான். அப்படி யானால், அளவில்லாத வருமானங்களையும் ஊதியங் களையும் உரிமைகளையும் பொதுமக்களிடமிருந்து பெற்றுக்கொண்ட தலைவன், அந்த மக்களுக்காக எவ்வளவு பாடுபடவேண்டும்? ஆதலின், தலைவ னுடைய நேரமும் புத்தியும் சக்தியும் சனங்களுக்குச் சொந்தமே அன்றித் தலைவனுக்குச் சொந்தம் அல்ல. சனங்களுடைய இன்ப துன்பங்களையே தன்னுடையன வாகத் தலைவன் மதிக்க வேண்டுமே அன்றித், தன்னை யும் மக்களையும் வெவ்வேறாகக் கருதக்கூடாது.

'எப்போதும் யாவரும் காணும்படி மலர்ந்த முகத்தை உடையவன் தலைவன்; அவன் அருள் பொழிகின்ற கண்ணை உடையவன்; மக்களுடைய குறை கேட்கச் சித்தமாயிருக்கிற செவி யுடையவன்; வாய்மையும் இன்சொலும் குடி கொண்ட நாவுடையவன்; அறமே அவதரித்தது போன்ற நற்குண நற்செய்கைகள் உடையவன்; புத்தியிலும் யுக்தியிலும் சாமர்த்தியத்திலும் யாவரினும் மேலானவன்; அப்படி இல்லாவிட்டால் அவனை யார் மதிப்பார்கள்? சூரியன் தன்னுடைய ஒளியால் எல்லாப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்வதுபோலத், தலைவன் தன்னுடைய நடத்தையால் குடிகளுடைய குணம் திருந்தும்படி செய்ய வேண்டும். அதனால் அவன் மக்களுடைய மனங்களையே வாசத்தலமாகப் பெறுகிறான்; தனக்கென்று தனி மாளிகை வேண்டுவதில்லை'.

தலைவனுடைய தகுதி தன்மைகளைப் பற்றி இத்தகைய கொள்கைகளைக் கொண்ட வேதநாயகம் பிள்ளையால், மாயூரத்துக்கு அமைந்த நலங்கள் பல. இவருடைய ஆட்சியிலே நகர் மன்றம் பல துறைகளிலும் முன்னேறி வளர்ந்தது. வருமானத்துக்குத் தகச் செலவினங்களைச் சரிக்கட்டி, செட்டாகவும் சீராகவும் நடந்து, பொதுநலத்துக் குகந்த காரியங்களிலேயே கருத்தாக இருந்தார். நடை பாதைகளையும் சாலைகளையும் அமைப்பித்து, அவைகளைச் செம்மையாகப் பேணி வந்தார். குருடர் முடவர்களும் அனாதைகளும் நகரத்திலே நடமாடிப் பிச்சை எடுக்காதபடி, அறச் சாலைகளை அமைத்தார். மருத்துவசாலைகளை நிறுவி, இலவச வயித்தியத்துக்கு ஏற்பாடு செய்தார். பள்ளிக்கூடங்களைத் தொடங்கிக் கல்வியுடன் தெய்வ

பக்தி நீதி நெறிகளைக் கற்பிக்கத் திட்டம் செய்தார். பெண்கள் கல்வியிலே மிகுந்த சிரத்தை எடுத்தார். சிறுவர்க்குத் தேக பலமும் நலமும் உண்டாகும்படி சிலம்பக்கூடம் முதலிய பயிற்சி மேடைகளைத் தாபித்தார். வீடுகளும் தெருக்களும் நாகரிகமாகவும் காற்று நடமாட்டமாகவும் இருக்கும்படி நடபடிக்கை எடுத்தார். இவ்வாறு தமது முதுமையிலே வேதநாயகம் நகர முதல்வராக ஓய்வின்றி உழைத்தார். அதனாலே மக்களுடைய நன்மதிப்புக்குப் பாத்திரமானார். நகர் மன்ற நடைமுறைகளை ஒழுங்கு படுத்துவதிலே, முன்னைய உத்தியோக அனுபவம் இவருக்குத் துணை நின்றது. பிறருடைய புகழ்ச்சிகளையும் இகழ்ச்சிகளையும் பொருட் படுத்தாது, தமக்கு நியாயமாகத் தோன்றிய காரியங்களையே நேர்மையாகவும் நிதானமாகவும் செய்து முடித்தார். இவர் எழுதுகிறார் 'விசுவாமித்திரர் அண்டங்களைப் புதிதாகச் சிருட்டிக்க ஆரம்பித்தது போலவே, நாங்களும் புதிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினோம். விசுவாமித்திரர் நினைத்தபடி முடிக்காமல் இடையிலே தங்கிவிட்டார். நாங்களோ தங்காமல், எங்கள் எண்ணங்களைப் பரிபூர்த்தி செய்தோம். எங்களால் பிரதிகூலம் அடைந்தவர்கள் எல்லாரும் எங்களைத் தூஷித்தார்கள்; அனுகூலம் அடைந்தவர்கள் பூஷித்தார்கள். நாங்கள் ஒன்றுக்கும் அஞ்சாமல் எங்களுக்குப் பொருத்தமாய்த் தோன்றின பிரகாரம் நடந்தோம்'.

# தெய்வ மரணம்

காலம் ஓயாமல் ஓடிக்கொண்டே இருக்கிறது. அது ஓடும்போது நம்முடைய ஆயுளையும் வாரிக் கொண்டு போகிறது. நாள் வாரம் மாசம் என்று பல வடிவிலே கழிவது நம்முடைய ஆயுளே அன்றி, வேறல்ல. முதியோர் இளையோர் எளியர் யாரையும் மரணம் விடுவதில்லை. நூறு வருடத்துக்கு முன் னிருந்த சனங்களிலே யாராவது ஒருவர் தற்போது இருக்கிறாரா ? அவர்கள் இறந்து போனார்கள் ; அவர் கள் மரபினர் வாழ்கின்றனர். நேற்றிருந்தவர் இன்றைக் கில்லை; இன்றைக் கிருப்பவர் நாளைக்கிரார், அடுத்த விநாடி நாம் பிழைத்திருப்போம் என்பது என்ன நிச்சயம்? ஆதலின் 'நித்தியமான பரலோக பாக்கியம்' பெரிதே அன்றி, நீர்மேற் குமிழிபோல் ஒழிந்துபோம் 'உலகமும் அதன் இச்சைகளும்' பெரிதல்ல. 'தேவ னுடைய சித்தத்தின்படி செய்கிறவன் எவனோ அவன் என்றென்றும் நிலைத்திருப்பான்' என்கின்றது விவிலியம். இதை உணர்ந்து வேதநாயகம் பாடுகிறார் :

வாழ்வை நம்பாதே மனமே
வாழ்வை நம்பாதே.
தாழ்விலாத நமது சுவாமி
தாளைத்தேடு; பாடு பூமி (வாழ்வை நம்பாதே)

தேகம் மாமிச முட்டை—பல
செந்துவுக்கும் நல்ல வேட்டை—அதில்
ஓகோ அனந்தம் ஓட்டை—உயிர்
ஓடிட எத்தனை பாட்டை.

இன்றைக் காளுவார் நாடு—நாளை
எடுப்பார் கையிலே ஓடு—உடல்
ஒன்றுக்கும் உதவாத கூடு—இதை
உற்றுப்பார்த்தால் வெட்கக்கேடு.
இந்த உலகத்திற் பிறந்தார்—முன்னம்
எத்தனையோ பேர்கள் இறந்தார்—பெற்ற
தந்தை தாய் பாட்டரும் பறந்தார்—நாலு
தாரங்கள் போய் நம்மை மறந்தார். *

என்று மனத்துக்கு அறிவுறுத்தி

தனி இளம் பருவமும் தாண்டிப் போனேமே
பனைபோல் வளர்ந்து கிழப் பருவமும் ஆனேமே
ஆசைக்கொரு கறுப்பு மயிரேனும் இலையே
ஐயையோ கொக்குபோல் நரைத்தது தலையே
காசுக்குதவாத கிழம் என்பது நிலையே
கன்னியர்க்கும் இனி நாம் கசக்கும் வேப்பிலையே
கண்கள் இரண்டும் மூக்குக் கண்ணாடி தேடும்
காலூசலாடும் ஓர் கழியைக் கைநாடும்

ஆதலின்,

இந்த நிமிஷமே பாப நிவர்த்தி
எனக்கருள்வாய் சுவாமி
எந்த நிமிஷத்தில் சாவு வருமோ என்று
ஏங்கியே பயந்தேனே—உயிர்
நீங்கிடில் என்ன செய்வேனே.
பொட்டென்று தேகந்தான் சட்டென்று வீழ்ந்திடில்
கிட்ட ஒருவர் நில்லாரே—குழி
வெட்டென்பர், பிரேதத்தைக் கட்டென்பர்; மண்ணைமேல்
கொட்டென்பர், போவர் பொல்லாரே.

என்று அவர் வருந்தினர். அவர் வருந்தியது மரணத்தைக் கருதி அல்ல; கடவுள் அருள் கைகூடவில்லையே என்று ஏங்கினர்.

* வேதநாயகம் பிள்ளைக்கு மனைவியர் நால்வர்

எங்கும் நிறையும் நீ எனக்குன்னைக் காட்டாய்
ஈதென்ன கண்கட்டு மாயமோ
அங்கும் இங்குமே உன்னைத்தேடி
அலையவைத்தாய் இஃது ஞாயமோ

என்று தவித்தார்.

வாழ்நாள் முழுவதும் வேதநாயகம் பிள்ளை 'உண்மையுள்ளது எதுவோ ஒழுக்கம்உள்ளது எதுவோ நீதி எதுவோ கற்பு எதுவோ அன்பு எதுவோ புண்ணியம் எதுவோ புகழ் எதுவோ' அவைகளையே சிந்தித்துக் கொண்டிருந்தார்; செய்து கொண்டிருந் தார். அரிய செய்தார்; அதனால் பெரியர் ஆனார். எல்லா தேசத்தார்க்கும் சாதியார்க்கும் சமயத்தார்க் கும் கடவுள் ஒருவரே என்றும், மானிடர் பரஸ்பர சகோதர வாஞ்சையோடும் மனநிறைவோடும் உலக மெங்கும் ஒத்துவாழும் சமாதான வாழ்வே சருவ மத சம்மதம் என்றும், கடவுள் வழிபாடு என்பது கடமை களைச் செய்தலே என்றும், மேலோர் வலுக்கட்டாயங் களுக்குப் பணிதலின்றி, மனசாட்சிக்கு மாறாய் ஒழுகாமல், வாய்மையைத் தழுவி வாழ்ந்த இம்மகானு பாவர் கடைசி ஒரு வருடம், நீரிழிவு என்னும் நோயால் வருந்தினார். மருந்துகளால் குணத்துக்கு வராமல் நோய் மேலிடவே, மரணத்துக்கு நாலுநாள் முந்தி, தம்து நண்பர்களுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதிலே உடல்நலங் காரணமாகத் தாம் வேறோர் இடத்துக்குப் புறப்படுவதாகவும் நண்பர்களிடம் நேரிலே விடை பெற்றுக் கொள்ளக் கூடாதிருப்பதுபற்றி வருந்துவ தாகவும் எழுதியிருந்தார். ஆங்கில மொழியில் அமைந்த அந்தக் கடிதத்தை அனுபந்தத்திற்காண்க. அதனைக்கண்ட அவர் நண்பர்கள் வந்து ஆறுதல்

கூறி, அவருடன் அளவளாவிக் கொண்டிருந்தார்கள். இரவு பத்துமணி வரை சாதாரணமாய் உரையாடிக் கொண்டிருந்தவர், திடீரென்று நண்பர்களை வெளியே போகும்படிப் பணித்துக் குருமாரை வரவழைத்துத் தமது ஆத்ம காரியங்களை முடித்துக் கொண்டார். மரணவத்தை என்பது சிறிதும் இன்றி, இரவு பதினொரு மணிக்கெல்லாம் பரலோக பதவி அடைந்தார்.

அன்று, 21-7-1889. அவர் குடும்பத்திலே ஒருவர் கூறுவதைப் படியுங்கள்: 'இவருடைய மரணத்தை அறிந்து உருகாதவர் ஒருவரும் இல்லை. பிள்ளைகள் எல்லாம் பிதாவின் பிரிவாற்றாது பிரலாபித்தார்கள்; பந்துக்கள் எல்லாம் எங்கள் பாக்கியம் போய்விட்டது என்று பரிதபித்தார்கள்; கற்றோர் எல்லாம் கல்விக் களஞ்சியம் மறைந்து விட்டது என்று கதறினார்கள். உற்றார் எல்லாம் உதவி அற்றோம் என்று உலைந்தார் கள். பாவலர் எல்லாம் பாவாணர் போய்விட்டார் என்று பதறினார்கள். அறிஞர் எல்லாம் ஆவிபிரிந்தது போல் அலமந்தார்கள்; வறிஞர் எல்லாம் வாழ் விழந்தோம் என்று மறுகினார்கள். வேதநாயகமாகிய இவ்வுலகின் நடு நாயகம் போய்விட்டதென்று, புலம்பாதவர் அன்று யாரும் இல்லை. இவர் மரணம் தமிழகத்தையே கலக்கி விட்டது. 24-7-1889-ல் வெளியான இந்து பத்திரிகை, தலையங்கம் எழுதி, வேதநாயகம் சாதனையைப் போற்றி, அதன் ஆற்றலை மையை வெளியிட்டது. பிற்சேர்க்கையிலே அதன் பிரதி காண்க. புதுவை சவராயலு நாயகர் பாடிய சரமகவி இது :

அந்தோ எங் கண்மணியே ! அரும்புலவர் சிகாமணியே !
அணியே ! என்றும்
நந்தாத விண்மணியே ! நாவலவர் உள் மணியே நடு
நியாயம்
சிந்தாமற் சரிநீதி புரிவேத நாயக ! நற் செம்மலே ! உ
வந்(து) ஆதி நாதனிடம் அணுகிவிட்டாய் யாங்கள் மிக
அயர்கின்றேமே.

வையகத்திலே வாழ்வாங்கு வாழ்ந்து, புலமை யாலும் பக்தியாலும் கடவுள் அருளைப் பெற்று ஞானத்தை அடைந்து, ஒழுக்கத்திலே மேம்பட்டு, உலக மக்களுக்கு முன்மாதிரியாய் விளங்கிய வேத நாயகம் பிள்ளை, தம் பின்சந்ததியார்க்கு விட்டு வைத் திருக்கிற பிதிரார்ச்சிதம் பெரிதே. தமிழ் மொழி வளர்ச்சி கருதி, இவர் எழுதிய நூல்களும், சமூக சீர் திருத்தத்திலே இவர் செய்த தீவிர முயற்சிகளும், கடவுள் பெருமையையும் மனிதரின் நன்மையையும் பெருக்குவதற்கான வழிகளிலே சலிப்பின்றி இவர் செய்த சேவைகளும், நன்றியறிவுள்ள தமிழ் மக்களால் என்றும் மறக்கப்படா. நமது வாழ்விலே அரிய செய்து நாமும் மேன்மையாக வாழலாம் என்று இவர் வாழ்க்கை நமக்கு நினைவூட்டுகிறது.

வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்—குறள்.

# நூலாராய்ச்சி

## பெண் கல்வி, பெண் மானம், பெண்மதிமாலை

### மறுமலர்ச்சி:

ஆங்கில வியாபாரக் கம்பெனியாருடைய ஆதிக்கம் இந்தியாவிலே பரவுவதை எதிர்த்து, 1857-ல் நமது சிப்பாய்கள் செய்த விடுதலை முயற்சிகள் வீணாகவே, விரோதியை வெல்ல முடியாது என்று, நமது மூதாதையர் விதிவிட்டபடி தங்கள் கதி என்று வாளா இருந்தனர்; என்றாலும், ஆங்கிலக் கல்வியின் பயனாக, அவர்களிடையே புதிய கருத்துக்கள் கற்பனைகள் கனவுகள்தோன்றின; புதியஉணர்ச்சிகள் ஓங்கின; விஞ்ஞான சுகபோகங்களின் சுவை பரவியது. புதிய கோட்பாடு—சுதந்திரம் சமத்துவம் சனநாயகம் என்ற தத்துவம் தலையெடுத்தது. சமயசமுக அரசியல்களிலே மறுமலர்ச்சிக்குரிய அறிகுறிகள் அரும்பின.

இராசராம் மோகன்ராயை - 1776-1833- மறுமலர்ச்சிக்குத் தந்தை என்னலாம். ஆங்கிலக் கல்வி பரவுவதற்குக் காரணமானவர்களிலே இவர்முக்கியமானவர் அல்லவா? விதவைகளை உயிருடன் வதைக்கும் 'உடன்கட்டை' ஏறலைச் சட்டமூலமாய் இவர் ஒழித்தார். இவர் செய்து வந்த சமுக சீர்த்திருத்த சேவைகளை, இவருக்குப்பின் வந்த கேசவசந்திரசென் மேற்கொண்டார். பிரமசமாசத்தைத் தொடங்கிய பெரியார் இவரே. மதுபானத்தை ஒழிக்க இவர் முன்வந்தார். 1872-ல் இயற்றப்பட்ட சிவில் விவாக

சட்டத்துக்கு இவர்தான் கருத்தா. அதன் மூலம் இவர் குழந்தை மணத்தைத் தடுத்து, பலதார மணத்தை வெறுத்து, கைமை மணத்தை அனுமதித்தார். ரானடே என்ற பெரியார் மராடத்திலே சீர் திருத்த இயக்கத் தைப் பிறப்பித்தார். தமிழகத்திலே மறு மலர்ச்சிக்குத் தந்தை நமது மாயூரம் முனிசீபே.

## புதிய இயக்கங்கள் :

பிரமசமாசம் போன்றவை, பழம் பெருமையைப் புறக்கணித்து, பழைய மரபுகளைக் கைசோரவிட்டு, மேனுட்டு நாகரிக மாயையில் மூழ்கின. அப்போது சென்னையிலே தொடங்கிய பிரமஞான சங்கம், பாஞ் சாலத்திலே தயானந்த சரசுவதி தோற்றுவித்த ஆரிய சமாசம் போன்றவை, நம்மவரை மயக்கிய உலகாயத மாயையைக் கலைத்தன. தேசபக்தியிலும் சீர்திருத்தக் கொள்கையிலும் ஆரிய சமாசத்தார் யாருக்கும் பின் தங்கியவர் அல்லர். என்ருலும், அவருள் பிளவு ஏற்பட்டு, லாலா லசபதிராய் தலைமையிலே ஒரு கூட்டத்தார், மேனுட்டு நாகரிகத்தைப் பின்பற்றியே நமது நாட்டவர் முன்னேற வேண்டும் என்று விரும் பினர். ஆனுல், சென்னை பிரமஞான சங்கத்தார், கீழ் நாட்டுக் கலை நாகரிகங்களின் மேம்பாட்டை உணர்ந்து, அதை உலகத்தாருக்கு எடுத்தோத முன் வந்தனர். ‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்’ என்ற சமரச மனப்பான்மையை அவர்கள் வளர்த்தார்கள் ; ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்ற சருவ தேசியத்தை அவர்கள் பரப்பினுர்கள்.

### வேதநாயகர் சாதனை :

இவ்வாறு சென்ற நூற்றாண்டின் இடையிலே எழுந்த உன்னத இயக்கங்களின் மேன்மையான கொள்கைகளை எல்லாம் ஆராய்ந்து தெளிந்து, பழங் காலப் பெருமைகளை நழுவ விடாமலும், எதிர்காலப் போக்கை அனுசரித்தும், நிகழ்காலத்திலே தமிழர்க்கு வழிகாட்டி நின்ற பெருமை மாயூரம் முனிசீப் வேத நாயகம் பிள்ளைக்கே. வேதநாயகம் வெகு காலமாய்த் தூக்கத்திலே அமிழ்ந்து கிடந்த தமிழரை விழிக்கச் செய்தார். தமிழர் மனத்திலே தேசபக்தி என்ற கனலைமூட்டினர்; நமது மூதாதையர் மாண்புகளையும் மகிமைகளையும் சிந்திக்கச் செய்தார். அவற்றின் அடிப்படையிலே, காலகதிக்குத் தக நமது சமுக அமைப்பை மாற்றிப், புது மாதிரிகளுக்குப் பொருந்தச் செய்து, உலகிலே புகழ்வாய்ந்த சன சமுகங்களிலே தமிழர் சமுதாயமும் ஒன்ருக விளங்குமாறு உதவி செய்தார்.

ஒரு காலத்திலே தமிழ்நாடு உயர்ந்த நிலையிலே இருந்தது; தற்போது பலதுறைகளிலும் அது தாழ்ந்து வருகிறது. பண்டைய உயர்நிலைக்கு மீண்டும் அதைக் கொண்டுவர, மக்களுடைய அறிவாற்றல்களைத் தூண்டி, சமுக பலத்தைப் பெருக்கி, விஞ்ஞானம் தொழில் வணிகம் நாகரிகங்களை வளர்த்து, உண்மை நேர்மை பொதுநல வுணர்ச்சி ஆகிய அருங் குணங் களைத் துணைக் கொண்டு, காலத்துக்குத் தகுந்த கோலம்பூண்டு, சந்தர்ப்பத்துக்குத் தகுந்த இணக்கத் துடன் முயல வேண்டும். இதுதான் வேதநாயகம் செய்த போதனை.

இவர் காலத்திலே அரசியலில் ஆட்சி கைமாறிய தால், குழப்பமும் கொந்தளிப்புமாய் இருந்தது. சமயத்துறையிலும் மூட வைராக்கியமும் குருட்டு நம்பிக்கையும் குடிகொண்டிருந்தது. இருப்புத்தளை போன்ற சாதிக்கட்டுப்பாடுகளும் ஆசாரஅனுட்டானங் களும் வாழ்க்கையைப் பாழாக்கிக் கொண்டிருந்தன. பலதார மணம் குழந்தை மணம் சிசுவதை சதி முதலிய நரக வேதனைகள் நிலவின. விலங்கினும் கேடாகப் பெண்கள் நடத்தப் பட்டனர்; பெண் கல்வி என்ற பேச்சே இல்லை. தூர்த்தத்தனத்திலும் துன்மார்க்கத் திலும் சோம்பலிலும் வம்பு துன்புகளிலும் மாந்தர் காலங்கழித்து வந்தனர். நல்லொழுக்கம் அரிதாய் இருந்தது. அஞ்ஞான இருள் நாடெங்கும் பரவி மூடி, மூடத்தனமும் பொய்யும் புலையும் மலிந்திருந்தன. என்று விடியும் என்பதை யாரும் அறியார். இந்த இருட் படலத்தைக் கிழித்து, உதய சூரியன் போலத் தோன்றியவர்தான் வேதநாயகம் பிள்ளை.

நமது நாட்டிலே பெண்கள், கல்வி இல்லாமையால் இன்றும் அறியாமை இருளில் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்களுக்குக் கல்வி கற்பிக்கவேண்டிய அவசி யத்தைப் பல ஏதுக்களால் வலியுறுத்தி, வேதநாயகம் பெண் கல்வி என்ற நூலை எழுதினார். அடிமைகளைப் போலப் பெண்கள் நடத்தப்படும் அநீதியைக் கண்டித் துப் பெண் மானம் எழுதினார். ஆடவரிடம் பெண்டிர் ஒழுகவேண்டிய முறைகளையும், அவ்வாறே பெண்டி ரிடம் ஆடவர் நடக்கவேண்டிய ஒழுங்குகளையும் ஆங்கில நூல்கள் வஞ்சனை இன்றிப் பேசுகின்றன. ஆனால், ஒருபால் கோடித் தமிழ் நூல்கள், கணவரிடம் மனைவி நடந்து கொள்ளும் மாண்பை மட்டும்

அருளின்றிச் சொல்லுகின்றன. 'இந்தக் குறையை நீக்கும் பொருட்டு இந்த நூலை நாம் எழுதியதே ஒழிய மாதர்களிடத்திலே கைக்கூலி வாங்கிக் கொண்டு, அவர்களுக்கு வழக்கறிஞராகப் போர்க்கோலம் பூண்டு நாம் புறப்படவில்லை' என்கிறார் வேதநாயகம்.

## 1. பெண் கல்வி :

வித்தையைப் படிப்பியுங்கள்—தயை செய்து
வித்தையைப் படிப்பியுங்கள்.
உத்தமவான்களே, சத்தியபிமான்களே
உங்கட்குக் கண்களான பெண்களாம் எங்களுக்கு
வித்தையைப் படிப்பியுங்கள்,
வாணியும் நீரும்ஒரு கோத்திரமா?—அவள்
வரப்பிரசாதம் உமக்குமாத் திரமா?
வீணில் அவட்கெங்கள்மேல் சாத்திரமா?—நாங்கள்
மெய்ஞ்ஞான மார்க்கத்துக்கு ஆகாப் பாத்திரமா—உம்மை
வெல்லோமோ—கல்வி
கல்லோமோ—கவி
சொல்லோமோ—புத்தி
இல்லோமோ.

இவ்வாறு வேதநாயகத்தின் சிறுமி வினவி, நூறு வருடங் கழித்துப் பெண் கல்வி இன்று எந்த நிலையிலே உள்ளது? ஆண் பிள்ளைகளின் கல்வி பெருகி உயர்ந்து வருகிறதே அன்றிப் பெண் கல்வி ஆமை வேகத்திலே வளர்கிறது. கல்விப் பயிற்சி வயிறு வளர்ப்பதற்கு ஒரு வழி என்ற எண்ணத்தில் ஆண்களின் கல்வி வளர்கிறது. கல்வியைக் கொண்டு மகளிர் சம்பாதிக்க வேண்டும் என்ற நோக்கம் இல்லாததால் பெண் கல்வி பெருகவில்லை. உலகில் உள்ள எல்லாச் சன சமுகங்களும் ஆண் பெண் என்ற இருபாலரால்

அமைந்தவை. ஒன்றின்றி ஒன்று உயிர் வாழா. இரு பாலரும் பிரிவற்றுப் பிணங்குதல் இன்றி, ஒன்றுபோல் ஒத்துழைத்து ஒரே நோக்கம் ஒரே ஆசையால் தூண்டப் பெற்ருல் அன்றி முன்னேற்றம் இல்லை. தாய்நாட்டின் பொருட்டு உழைப்பது ஆடவர் கடமை; மகளிர் கடமையுந்தானே. ஆதலின் நாட்டு நடவடிக் கைகளிலே கலந்து பணிபுரியப் பெண்கள் போதிய கல்வியுடையவராய் இருத்தல் எத்துணை அவசியம் ?

## 2. பெண் மானம் :

பெண்களுடைய வேலை வீட்டுக்குள்ளே ; வாசல் கடப்பது பத்தினித் தன்மைக்குப் பாதகம். வாசலைத் தூர்த்து மெழுகி, அடுப்பூதி வருவதுதான் அவர்க ளுக்குச் சரியென்று இன்றும் சலஞ் சாதிப்பவர் நம்மிடையே இல்லாமல் இல்லை. பழங்கால சூழ் நிலையிலே அந்த ஏற்பாடு பொருந்தும். அப்போது, ஒவ்வொரு வீடும் ஒரு நாடு. ஒவ்வொரு குடும்பமும் ஒவ்வொரு சமூகம். ஒன்றுக்கொன்று தொடர்பில்லை. இன்று நாம் சாதி சமய பேதமற்ற சமத்துவ சமுதா யத்தை உருவாக்க முற்பட்டிருக்கின்ருேம். ஆதலின், ஆண் பெண் என்ற பாலுணர்ச்சியைக் கடந்து, ஒருவ ருடன் ஒருவர் தடையின்றிக் கலந்து பழகவும் ஒருவர்க் கொருவர் துணை நிற்கவும் அவசியம் நேரிடுகிறது.

மனைவி அடிமையாகவும் கணவன் எசமாளுகவும் இருக்கிற எந்தச் சாதியும் முன்னேருது. ‘துரைமகள் ஆனுலும் பாரி — கொண்ட உரியவனுக்கு அவள் ஊழியக்காரி’ என்பது பழைய கொள்கை. தன்

மதிப்புத் தன் மானத்துடன் தாயானவள் சுதந்திர வாழ்வு வாழ்ந்தால்தான் தாழ்ந்த தமிழகம் தலைநிமிரும். மனைவியிடம் அவள் கணவன் அன்பாய் இருக்கிறன்; அல்லது கணவனிடம் அவன் மனைவி பொறுமையாய் இருக்கிறள் என்பதும் இன்று போதாது. மணவாளர் இருவரும் தோழனும் தோழியுமாய் ஒன்றுய் உண்டு ஒன்றுய் வேலைசெய்து ஒருவருக்கொருவர் துணை நிற்க வேண்டும். இவ்வாறின்றி, இருவரது உரிமை களும் கடமைகளும் வெவ்வேரும் போது, வீட்டிலே அமைதியும் இன்பமும் நிலவா. கணவன் தன் மனைவி யைத் தனக்கு வாழ்க்கைத் துணையாக ஆக்கிக் கொள் ளட்டும்; தன்னுடைய அலுவலிலும் பொழுதுபோக் கிலும் அவளைச் சகவாகக் கொள்ளட்டும். அப்போது வாழ்க்கை அலுப்பாகவோ கசப்பாகவோ ஒரு நாளும் இருக்காது.

### 3. பெண் மதி:

பெரும்பாலான பெண்களுக்குத் தற்போது ஆடவரது அவாக்களிலும் நோக்கங்களிலும் கலந் துழைக்கச் சக்தியும் ஊக்கமும் இல்லை. அதற்குக் காரணம் அவர்களுக்குப் போதிய கல்வி இன்மையே. பெண்கள் கல்வி கற்று அறிவும் அனுபவமும் பெற்று கணவனுடைய முயற்சி குறிக்கோள்களை அறிந்து, பரிவுடன் உதவி செய்தல், இன்றைய சூழ்நிலையிலே இன்றியமையாதது. பெரும் காரியங்களைச் செய்வது பெண்மையை உயர்த்திப் பிரகாசிக்கவே செய்யும்.

தமிழரது பழஞ் சரிதத்திலே, தங்கள் அருங் குணங்களாலும் பெருங் கருமங்களாலும் கீர்த்தி பெற்றுக், குன்றின் மேலிட்ட விளக்குப் போலத் தங்கள் பெயரைநாட்டிய பெண்மணிகள் இல்லாமற் போக வில்லை. அனுபவ ஞானத்திலே ஔவை அனைவரினும் மேம்பட்டவர் அல்லவா? தெய்வ பக்தி தவம் சீலம் முதலிய பண்புகளிலே காரைக்காலம்மை, ஆண்டாள் பெயர்கள் பெரும் பிரசித்தி அல்லவா? சகோதரனைத் திருத்திய திலகவதிகள், மணவாளனை நல்வழிப் படுத்திய மங்கையர்க்கரசிகள், கன்னிமைப் பெருமை யில் மணிமேகலைகள் தோன்றிய நாடு தமிழ்நாடு. கண்ணகி ஆதிமந்தி அனைய புண்ணிய நாமங்கள் பெண்ணின் கற்பு காதல் முதலிய ஒழுக்கங்களுக்கு அழிவிலாத சான்றுகள். தமிழ்நாடு மீண்டும் உயர் வடைய இந்த மாதரசிகளைப் போலத் தமிழ்ப் பெண்கள் பயிற்சி பெறவேண்டும். இதற்கு ஆதியில் வழிகோலி யவர் வேதநாயகம் பிள்ளையே.

## 2. நீதி நூல்

### அறநூல்கள் :

தமிழிலே அறநூல்கள் அமைந்து கிடக்கிற அளவு வேறு எந்த மொழியிலும் இல்லை. ஆத்திசூடி முதல் திருக்குறள்வரை, அளவிலும் தரத்திலும் பிறமொழி களிலே காணக்கிடையாவகை அறநூல்கள் தமிழிலே உண்டு. பாலர் வகுப்பு முதல் பி.ஏ. வகுப்பு முடிய படிமுறை பயில்வதற்குரிய இவை, பல்வேறு காலங் களிலே பாடப் பெற்றவை. பலரால் பாடப் பெற்றவை. ஒன்றுபோல மற்றொன்றில்லை. அறத்தை ஓதுவதிலும் வலியுறுத்துவதிலும் ஒவ்வொன்றும் வெவ்வேறு வழியைக் கடைப்பிடிக்கிறது. ஆத்திசூடி, கொன்றை வேந்தனை யாவரும் அறிவர். நல்வழி, நன்னெறி, நீதிநெறி விளக்கமும் நீங்கள் அறிந்தனவே. சமூக நீதியை வலியுறுத்தி வாழுமை வகையை வற்புறுத்து வதிலே இவை தலைசிறந்தவை அல்லவா ? இவையே அன்றி, ஏலாதிச் சூரணம், சிறுபஞ்சமூலம், திரிகடும் போன்ற மருந்துவகைபோல, மனநோய் தீர்க்கவல்ல அறநூல்கள் சில; வாழ்க்கையிலே இனியவை இவை இன்னாதன இவை என்று எடுத்தோதுகின்ற பனுவல் கள் சில; மேலும், பொருள் மொழிக் காஞ்சிகளும், முதுமொழிக் காஞ்சிகளும், வாயுரை வாழ்த்துக்களும், செவியறிவுறுஉக்களும் பற்பல. இவை எல்லாமே,

> சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய
> வந்த இருவினைக்கு மாமருந்து.

அறநூல்கள், இவ்வாறு பலபடியாய்த் தமிழிலே அமைந்துகிடக்கவும், வேதநாயகம் பிள்ளை இவற்றின் வேருக, நீதி நூல் என்று அறு நூறு பாடல்களைப் புதியவையாகப் புனைந்து, காலத்துக்குத் தகத் தமிழர் வாழ்க்கைக்குப் புதிய வழி காட்டினுர். சீர்காழியிலே சில்லா முனிசீபாக அமர்ந்திருந்தபோது, 1859-ல் இவர் நீதி நூலை வெளியிட்டார். தமிழ் வழங்கும் நாடெங்கும் அது வரவேற்கப்பட்டது. ஐம்பத்தாறு புலவர்கள் பாயிரம் பாடி அதைப் பாராட்டினுர்கள்; வள்ளலார் என்று பிரசித்திபெற்ற வடலூர் இராம லிங்க சுவாமிகள் அவர்களிலே ஒருவர். இதன் மறு பதிப்பு 1860-ல் அச்சாகியது.

## சமயதத்துவம் :

வேதநாயகம் பிள்ளை ஒரு மெய்க் கிறித்தவர்; இயேசு நாதரைப் பின்பற்றியவர். கடவுள் விருப்பப் படி நாம் நடப்பது என்று, நம்மைக் கடவுள் கையில் ஒப்புக்கொடுத்து, புலன்களை அடக்கக் கற்ருேம் என்ருல், நாம் கடவுளை நெருங்கி வாழ்கின்றவர் ஆவோம். கடவுள் கட்டளையை நிறைவேற்றிப், பலனை நாடாமல், கடமைகளைச் செய்வது என்பது தான் கிறித்துவ சமயத்தின் அடிப்படை. கடவுளே தந்தை என்றும், மானிடர் யாவரும் சகோதரர் என்றும், மெய்ப்பித்து, அதன் மூலம், மனிதன் அடையக் கூடிய ஆன்ம வளர்ச்சியை விளக்கி, வேதநாயகம் நீதி நூல் எழுதினுர்.

பணக்காரன் ஒருவனுக்கு இயேசு கொடுத்த விடையிலிருந்து, கீழே குறிப்பிட்டவைகளையே அவர் முக்கிய கற்பனைகளாகக் கருதினுர் என்பது தெரிய வருகிறது.

கொலை கூடாது
விபசாரம் விலக்கு
களவை அகற்று
பொய்சாட்சி புகலாதே
தந்தை தாய்ப் பேண்
அயலானை நேசி

இவையே முதன்மையானவை என்று, மலையின் மீது செய்த அறிவுரையினும் இயேசு இயம்புகிறார். இவற்றை விவரித்தே வேதநாயகம் நீதி நூல் இயற்றினார். அவர் வேதாந்தம் என்பது இது :

ஈசனையே துதித்தல், அவன் திருநாமத்தொடு
திருநாளினைக் கொண் டாடல்
நேசமார் அனைதந்தை வணங்கல்,
கொலை செய்யாமை, நிழங்காமத்தை
நாசமாக்குதல், களவு பொய் நீக்கல்,
பிறன்மனை பொன் நாடாமை,
மாசறும்இவ் விபத்தும் வேதாந்தம்
எனக்கடவுள் வகுத்திட்டானால்.

இந்தக் கற்பனைகள் பாரமானவை அல்ல ; கடைப்பிடிப்பதற்கு எளியனவே. 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' என்று நம்புவது எளிதல்லவா? நம்மைப் பெற்று வளர்த்த தாய் தந்தையரை நிந்தித்து, அவர்களைப் பராமரியாமல், அவர்கள் சாபத்துக்கு ஆளாகி, அவர்கள் வயிறு எரிகிறபடி நாமும் எரிந்து, நமது பிள்ளைகளால் நாமும் புறக்கணிக்கப் படுவது எளிதா? அல்லது பெற்றோரைப் பேணி வணங்கி அவர் வாழ்த்தைப் பெற்று வாழ்வது எளிதா? நெஞ்சைக் கல்லாக்கிக், கொலை பாதகத்துக்காளாவது எளிதா? அல்லது, கொடிய பாவத்துக் காளாகாமல்

பிற உயிரையும் தன்னுயிர் போலப் பாதுகாத்தல் எளிதா ? நெஞ்சில் அச்சமும், கண் முன் கழுமரமும் வைத்துத் திருடிப் பிழைப்பது எளிதா ? அல்லது, சம்பாதிப்பதைத் தானும் உண்டு பிறருக்கும் பகிர்ந் தளிப்பது எளிதா ? ஆதலின், எது எளிது எது இனிது என்று உணர்ந்து, என் கடன் பணி செய்து கிடப்பதே என்று செம்மாந்திருப்பது சிறந்த வழி என்று நீதி நூலிலே வேதநாயகம் பிள்ளை போதித்தார். இவர் வேதாந்தம் என்ற 'கற்பனையின் பொருள் என்ன வென்றால், தூய இதயத்தினாலும் நன்மனச் சாட்சி யினாலும் வஞ்சனை இல்லாத விசுவாசத்தினாலும் பிறக்கிற அன்பு தானே.'

## அன்பே கடவுள் :

இயேசு நாதரை ஒரு சமயம் சாஸ்திரி யொருவர் நியாய சாத்திரத்திலே எந்தக் கற்பனை முக்கியம் என்று வினவினார். அதற்கு இயேசு 'உன் ஆண்டவ ராகிய கடவுளிடம் உன் முழு இதயத்தோடும், உன் முழு ஆத்மாவுடனும், உன் முழு மனத்துடனும் அன்பு கூர்க' என்றார். இதுவே முதன்மையானதும் பெரியது மான கற்பனை. இதற்கடுத்தது, 'உன்னிடத்திலே நீ அன்பு கூர்வது போல, உன் அயலானிடத்திலும் அன்பு கூர்க' என்பது. 'இவ்விரண்டு கற்பனைகளி லும் நியாயப் பிரமாணம் முழுவதும் தீர்க்க தரிசனமும் அடங்கி யிருக்கின்றன.' மேலும், நற்சமாரியன் கதையிலே சாதி மத வகுப்பு வேறுபாடு கருதாது அயலானுக்கு நாம் உதவி செய்ய வேண்டும் என்பது தெரிகிறதல்லவா ? ஆதலின் அன்பின் மூலமும், நாம் பிறர்க்குச் செய்யும் தொண்டின் மூலமும் கடவுளை வழிபட வேண்டும். வேதநாயகம் நீதி நூலிலே,

முந்தை இறைக் கன்பு, பின்பு
தன்னுயிர்போல்
மன்னுயிரை முறையின் ஓம்பல்
இந்தஇரு விதிகளினுள்
வேதம் எலாம் அடங்கும்.

என்கிருர். அன்பின் நிலை யாது? அதன் பயன் என்ன?

எவ்வருணர் எச்சமயர் எப்பதியர்
எத்தொழிலர் எனினும், நாளெடு
அவ்வவர்கள் எவ்வம்உரை யாமுனம்
உணர்ந்துதவல் அன்பின் நிலையாம்.
இவ்வரிய அன்புடைமை இன்றிநிரு வாண முறை
எண்ணி விழைதல்,
பௌவ உலகத்து உருளில் தேரினை
நடாத்த உறு பான்மை நிகரால்.

## கடவுள் வழிபாடு :

கடவுள் உண்டு; உண்டு என்பதற்கு உலகமே சான்று, மேகம் இல்லாமல் மழை இல்லை; வயல் இன்றி விளைவு இல்லை. பசுவின்றிக் கன்றுண்டா? சூரியன் இல்லாமல் ஒளி ஏது? அரசின்றிக் காவல் அமையுமா? தாய் இல்லாமல் சேய்தான் உண்டா? ஆதலின், 'மேல் நின்ற கடவுள் இன்றி மேதினி இல்லை மாதோ' என்று வேதநாயகம் எளிய நியாயங் களால் கடவுள் உண்மையை நிறுவுகிருர். பின் கடவுள் இயல்பை விவரித்துக் கடவுளை வழிபடுக என்று அதற்குரிய காரணங்களைத் தமக்கே உரிய எளிய முறையில் விளக்குகிருர். கடவுளைக் கதிர் களாகிய கையால் சூரியன் தொழுகின்ருன்; ஆடியும் பாடியும் பறவைகள் பணிகின்றன; மலர்தூவி மரங் கள் வணங்குகின்றன. பஞ்ச பூதங்களும் தத்தம்

தொழில் செய்து சேவிக்கின்றன. தன் கோஷத்தால் கடலும் கும்பிடுகிறது. மனமே! நீ மட்டும் வாழ்த் தாதது என்னே? என்று வினவுகின்ருர். கடவுள் வாழ்த்து அல்லது வழிபாடு என்பது அவரவர் தத்தம் தொழிலைச் சரிவரச் செய்தலே.

கதிரவன் கிரணக்கையால் கடவுளைத் தொழுவான்; புட்கள்
சுதியொடும் ஆடிப்பாடித் துதிசெயும்; தருக்கள் எல்லாம்
பொதி அலர் தூவிப் போற்றும்; பூதம்தம் தொழில் செய்து
[ஏத்தும்
அதிர்கடல் ஒலியால் வாழ்த்தும்; அகமே நீ வாழ்த்தா தென்னே.

## பிரார்த்தனை:

மனிதனையும் கடவுளையும் ஒன்று சேர்ப்பது பிரார்த்தனை. பிரார்த்தனையின் மூலம், மனிதன் கடவுளுடன் தன்னைப் பிணைத்துக் கொள்கிருன். கடவுளுடைய சித்தத்தை நிறைவேற்றுகிறவன் எப்போதும் கடவுள் நினைவாகவே இருக்க வேண்டும். அதனுல் அறிவை அடையலாம்; ஆற்றலை அடையலாம். பிரார்த்தனை என்பதற்கு வேண்டியதைப் பெறல் என் பது பொருள். அதனுல் பிரார்த்தனைக் கூட்டங்களிலே தேவைகளை யாசிப்பதே பெரிய அமிசமாக இருக்கிறது. இது கூடாது. பிரார்த்தனையிலே செபத்தின் மூலம் மனிதன் கடவுளிடம் தொடர்பு வைத்துக் கொள்ள முயலவேண்டும். முழுபக்தியுடன் கடவுளோடு தன் னைப்பிணைத்து அவரிடமிருந்து சக்தி பெறும் வழியே செபம். செபத்திலே எதையும் யாசித்தல் கூடாது; யாசிப்பதாயின் இவ்வாறு வேண்டலாம்.

அப்பா நான் வேண்டுதல் கேட்
டருள் புரிதல் வேண்டும்
ஆருயிர்க் கெல்லாம் நான்
அன்பு செயல் வேண்டும்.

வேறுவிதமான வேண்டுதல் சரி அல்ல. இயேசுநாதர் தமது சீடருக்குப் போதித்த செபம் மிகவும் மேன்மை யானது. அது பரமண்டல மந்திரம் எனப்படும். ஏழு படிகள் அதிலே அடங்கியிருக்கின்றன. முதலிலே கடவுள் துதி; கடவுள் படைப்பு பாதுகாப்பு தியானிக் கப்படுகின்றன. அடுத்தாற்போல, கடவுள் சித்தம் சத்தியம் சிந்திக்கப்படுகின்றன. இவற்றுடன் கடவு ளிடம் ஒப்புவிக்கப்பட்ட வாழ்க்கை கருதப்படுகிறது. கடைசி மூன்றிலும், இவ்வித வாழ்வுக்குத் தேவையான வலிமை தூய்மை அசைவின்மை அருளவேண்டும் என்ற பிரார்த்தனை அடங்கியிருக்கிறது. இந்தப் பரமண்டல மந்திர முறையைத் தழுவி வேதநாயகம் பாடிய பிரார்த்தனைப் பாடல்களிலே பக்திச் சுவை கனிவதைப் பார்க்கலாம். ஓதுதற்கு அவை எளியவை; ஆனால் உணர்தற்கு அரியவை; வேதப் பொருளாய் அவை விளங்குகின்றன. அவற்றிலே இரண்டு பாடல் கள் பின்வருவன;

'நெஞ்சமே! உலகைப் படைப்பவன் பாதுகாப் பவன் பாழ்படுத்துபவன் கடவுள். அவன் அமரர்க் கரசு; மக்கள் தலைவன்; மாசில்லான். இத்தகைய கடவுள், கோயிலைவிட உன்னையே விரும்பி உன்னிடமே குடியிருக்கிறான். அவன் அருளை நாடாமல், அவன் பால் பக்தி வையாமல் நாத்தழும்பேற அவன் புகழை நாளும் ஏத்தாமல், ஏத்திப் பாடாமல், பாடி மனம் உருகாமல் அவன் வசப்பட்டுத் தன்னை மறவாமல் ஆடாமல் அவன் அருளைக் கொண்டாடாமல் இருக் கின்றாய். அவனைத் தவிர்த்து மனமே உனக்குத் துணை யார்? தொண்டர் என்ற பயிர் தழையச் சொரிகின்ற முகில் அவன். மனக் கமலத்தை மலர்விக்கும் ஒளி அவன்.

வீடாத முத்தொழிலோன், விண்ணவர்கோன் மண்ணவர்கோன்
கோடாத செங்கோலன் குற்றம் இல்லான்; நித்தம் உனை
வீடாகக் கொண்டுறையும் மேன்மை உற்ருய்; இவ்வருளை
நாடாய்; அளி நீடாய்; நாத்தழும்பப் போற்றி நிதம்
பாடாய்; உருகாய்; பரவசம் மிகூர்ந்து நிதம்
ஆடாய்; கொண்டாடாய்; வேருர் உதவி சொல் மனமே!

தொண்டர் எனும் பயிர் தழையச் சொரி முகிலே, அவர் இதய
முண்டகங்கள் நெகிழ்த் தொளியை, மும்மலம்வேர் அறவீசும்
கண்டவளியினைப், பாவத்தழல் அவிக்கும் தண்புனலைக்
கண்டவர்தம் சுகநிலையைக் கருதாயோ மனமே
காணரிய பரஞ்சுடரைக் கருதாயோ மனமே.

## சமத்துவம் :

உலகிலே ஏழை யார்? செல்வர் யார்? இராட்டினத்திலே ஏறிச் சுற்றும்போது,

> மேலவர் கீழும் கீழோர் மேலுமாய்ச் சுழலல் போல,
> ஞாலமீது இன்றுயர்ந்தோர் நாளையே வறியர் ஆவர்;

ஆதலின், செல்வச் செழிப்பாற் செருக்கி உயர்வு தாழ்வு பாராட்டுவது பேதமை என்கிருர் வேதநாயகம். பிறப்பினுல் பெருமை பேசுவதோ மடமை; மக்கள் யாவரும் சகோதரர். கடவுளே அனைவர்க்கும் தந்தை. நாம் அவர் மக்கள். ஆதலின் நம்முள் ஏற்றத் தாழ்வு ஏது? குணத்திலே அன்றிக் குலத்திலே சிறப்பில்லை; அறிவிலே அன்றி அந்தஸ்திலே மாண்பில்லை. சாதி பேதங்களும் வேறுபாடுகளும் சுயநலமிகள் கற்பனை என்று சமத்துவக் கொள்கையைத் தமிழிலே முதன் முதல் பிரசாரம் செய்தது வேதநாயகம் பிள்ளையே. அவர் சொல்லுகிருர்;

நாதனே உயர்வாம் தந்தை ;
நரர் எல்லாம் அன்னுன் சேயர்.
பூதலப் பொருள்கள் யார்க்கும்
பொதுமை அல்லாது சொந்தச்
சாதனப் பொருள்போல் செப்புச்
சாசனம் பெற்ருேர் இல்லை.

என்று, முதலாளி யார் ? பாட்டாளி யார் ? உலகிலே அனைவரும் உழைப்பவரே; உழைப்பால் உயர்பவரே.

ஒளிமுடி யொடும் பிறந்தே
உலகம் ஆண்டவரும் இல்லை ;
எளியராய் ஓடொன் றேந்தி
இங்குதித் தவரும் இல்லை.

பெருமைக்கும் ஏனைய சிறுமைக்கும் தத்தம் கருமமே உரைகல் என்ற வள்ளுவர் கருத்தும் உழைப்பின்றி மனிதன் வளர்ச்சி அடைய முடியாது என்பதுதானே. வேலையின் மூலமே மனிதன் தன்னுடைய சக்தியை வெளிப்படுத்த முடியும். தொழில் புரிவதை சாபத்தீடு என்று கருதுவது தவறு. இயேசுநாதர் பேதுருவுக்குத் தம்மிடம் உள்ள அன்பைத் தமது ஆடுகளை மேய்ப் பதன்மூலம் வெளிக் காண்பிக்கச் சொன்னுர். ஆதலின் தொழிலிலே ஈனம் இல்லை, ஈனம் கற்பிப்பது.

‘ வெளிமயக்கன்றிச் சற்றும் மெய்யல ’ என்கிருர் வேதநாயகம். தமது வாழ்க்கைக்கு வேண்டியதைத் தாமே தேடிக்கொள்ளக்கூடிய திறமையையும் சந்தர்ப் பத்தையும் அளிப்பது சிறந்ததல்லவா ?

## கல்விச் செருக்கு :

பண்டிதன், கனபாடி, சடாவல்லபன் என்று, கல்வியால் செருக்கித் திரியும் சிலரை நாம் காண் கிருேம். மூச்சுவிடும் முன்னே முன்னூறும் நானூறும் கவி சொல்ல வல்லோம் என்ற காளமேகம் போலக்

கருவங்கொள்கிற புலவர்கள் இன்று இல்லாமல் இல்லை. இது என்ன பேதமை என்கிறார் வேதநாயகம். பருத்தியைப் பயிராக்கி, பஞ்சடித்து நூலெடுத்து ஆடை நெய்து கொடுத்தால் அதை உடுத்திக் கொள்வது வருத்தமா? உழுது விதைத்து அறுத்து அரிசியாக்கிச் சோறு பொங்கித் தந்தால் அதைப் புசிக்க வாய் நோகுமா?

அருத்தமொடும் இலக்கணங்கள் இலக்கியங்கள்
அரியநூல் பல முன்னோர் அளித்த தாலே
கருத்தேய்அந் நூல்கள்சில கற்றுணர்ந்து
கவிசொல்லல் வியப்பன்று. கர்வம் என்னே!
என்ன நீ வருந்திக் கவி பாடினும்
எடுத்தகற்பனை முன்னோர்
சொன்ன தேஅலால் நூதனம் ஒன்றிலை.
தொன்மை நூல் பலவாகும்;
முன்அந் நூல் எலாம் தந்தவன் நீ அலை;
முற்றுணர்ந்தனை அல்லை;
உன்னின் மிக்கவர் பலர் உளர். கல்வியால்,
உள்ளமே! செருக் கென்னே.

கடவுளின் நியமப்படி அண்டகோடிகள் சுழல்கின்றன. இவற்றிலே மனிதன் எம்மாத்திரம்? பொடியினும் பொடி தூசியினும் தூசி அல்லவா? கணக்கிடாத கால வெள்ளத்திலே மனிதனுடைய அற்ப ஆயுள் எம்மாத்திரம்? காலையிலே மலர்ந்து மாலையிலே வாடும் பூக்கள் போன்றதே. இந்தப் பெரிய அண்டத்திலே மனிதனுடைய செய்கையும் திறமையும் அல்ல, கடவுளுடைய திட்டமே ஒவ்வொரு கணமும் நிறைவேறுகிறது. திராட்சைத் தோட்டக்காரன் என்ற உவமைக் கதையிலே இயேசு கூறியவிதம், நமது நிலையும் நமது திறமையும் கடவுள் அருளால் நமக்கு அமைந்தனவே. ஆதலின் கருவமோ பெருமையோ நாம் கொள்ளல் கூடாது.

# 3. சருவ சமய சமரசக் கீர்த்தனைகள்

## கருநாடக சங்கீதம் :

தமிழகம் வளர்த்த கலைகளிலே சங்கீதம் தலை சிறந்தது. மிகவும் இது மேன்மையான கலை—கவின் கலை. தமிழர் இதனை யாழோர் மறை—கந்தருவ வேதம் என்பர்.

கீதம் வாத்தியம் நிருத்தியம்—இம் மூன்றும் சேர்ந் ததே சங்கீதம். நிருத்தியம் (நாட்டியம்) ஒதுக்கப்பட்டு, கீதமும் வாத்தியமுமே தற்போது சங்கீதம் என்று சொல்லப்படுகிறது.

தமிழகத்திலே சங்கீதம் பண்டே கனிந்து பண் பட்ட கலை. மிகப் பழங்காலத்திலேயே, தமிழ் மக்க ளிடையில் இசைஞானம் மேம்பட்டிருந்தது. சிலப்பதி காரம் தெரிவிக்கிற சங்கீத வகை, வளம், விரிவு தற்போது நமக்கு வியப்பைத் தருகிறது. பழந்தமிழ்ப் பண்கள் உருக்கள் திறங்கள் உருமாறிப் பெயர் மாறிப் பிற்காலத்திலே கருநாடக சங்கீதமாக மலர்ந்தது.

கருநாடக சங்கீதத்திலே சாகித்தியங்களை இயற்றிப் பிரசித்தி பெற்றவர்கள், சியாமா சாஸ்திரி [1] தியாகையர் [2] முத்துசாமி தீட்சிதர் [3] போன்றவர்கள். இவர்கள் 18, 19-ஆம் நூற்றுண்டுகளின் பின் முன் தஞ்சை மாவட்டத்திலே வாழ்ந்தார்கள். இவர்க ளுடைய பாடல்கள் தெலுங்கு சமஸ்கிருத மொழி

---

1. 1762 - 1827; 2. 1767 - 1847; 3. 1776 - 1835.

களிலே அமைந்தவை. இவர்களால் தஞ்சாவூர் சங்கீதத்தின் வளர்ப்புப்பண்ணை ஆயிற்று. சாகித்தியங்களிலே தமிழ் புறக்கணிக்கப்பட்டது.

## தமிழிலே இசைப் பாடல் :

இக்கால எல்லையிலே தமிழ்மொழியில் இசைப் பாடல்கள் எழாமல் இல்லை; எழுந்தவை பலவும் புராணக் கதைகளையும் இதிகாசங்களையும் தழுவியே அமைந்தன. இராம நாடகம் கந்தபுராணக் கீர்த்தனைகள் இந்த வகையிலே குறிப்பிடத் தகுந்தவை. என்றாலும், தியாகையர் போன்றவர்கள் முயற்சியால், சங்கீதத்துக்குரிய மொழியாய்த் தெலுங்கு திகழ்ந்தது. இதை விரும்பாத வேதநாயகம் பிள்ளை தாய்மொழியிலே இசைப்பாடல்களை எழுதினார்; சமயச் சார்பின்றி, சமுதாயம் முழுமைக்கும் பொதுவாகச் சமரசத்தை வளர்த்துச் சாகித்தியங்களை எழுதினார். தியாகையர் தமது பாடல்களால் இராமபக்தியை வளர்த்தார். கோபாலகிருஷ்ண பாரதி சிவபக்தியைப் பரப்பினார்.

வேதநாயகம் நூற்றுக் கணக்கான அரிய உருப்படிகளை இயற்றினார். ராகபாவம் திகழும் இவருடைய உருப்படிகளிலே அபூர்வ ராகங்களும் காணப்படுகின்றன. ஒரே ராகத்தில் இவர் இயற்றிய பல பாடல்களையும் பார்த்தால், அவை ஒவ்வொன்றும் தனித்தனி அமைப்புடன் விளங்குவதை அறியலாம். இசை வளத்துடன் கூடிய இவை மனத்தைக் கவரும் வர்ண மெட்டுகளில் அமைந்திருக்கின்றன; இவருடைய பல்லவி அமைப்பே அருமையானது; சரணங்கள் பல்லவியைத் தழுவி நிற்கும்; அவை இசைக்கிசைந்த கமகங்கள் தாளக்கட்டுகள் உள்ளவை. இவருடைய

உருப்படிகள் இசைகனிந்து, சொற்சுவை பொருட் சுவை பொதிந்து, பொருத்தமான தாதுக்களிலே அமைந்து, நாவுக் கெளியனவாயும் செவிக்கினியன வாயும் பரவசப் படுத்துகின்றன.

## உருப்படிகள் :

நாம் பாடிவரும் பாடல்களை உருப்படிகள் என்பர். இசையுடன் கூடித் தாளத்திலே அமைந்த சாகித்தியம் உருப்படி. உருப்படிகளை இயற்றியவர்களை 'வாக்கேய காரர்' என்பர்; இவர்களை நாம் இசைப்புலவர் என்ன லாம்; வேதநாயகம் சிறந்த வாக்கேயகாரர்—இசைப் புலவர்.

நமது சங்கீதத்திலே வழங்கும் உருப்படிகளை மூன்று பிரிவாக வகுக்கலாம். ஒன்று வாய்ப்பாட லுக்கு அமைந்தவை; மற்றது கருவியிலே வாசிப்ப தற்குத் தகுந்தவை; ஏனையது நாட்டியத்துக் கேற்றவை. இவற்றுள் வேதநாயகத்தின் இசைப் பாடல்கள் பாடுதற் கமைந்தவை. இசையை இவை முதன்மை யாகக் கொண்டவை அல்ல; நாட்டியத்துக்குத் தக்கவை அல்ல; பாமர கானத்துக்குப் பக்குவமானவை அல்ல. சமுதாயத்திலே நல்லொழுக்கம் நல்லுணர்ச்சி களை இசைப்பாடல்கள் மூலம் பரப்புவது வேதநாய கத்தின் நோக்கம்.

## கீதமும் கீர்த்தனையும் :

உருப்படிகளிலே எளியது கீதம்; ராகத்தின் களையையும் சஞ்சாரக் கிரமங்களையும் கீதம் நன்கு விளக்கும். பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற

உறுப்புக்கள் கீதத்திலே இல்லை; சங்கதிகள் அதிலே வாரா. தாதுக்கள் எளிய நடையிலே அமைந்திருக்கும். கீதம் இருவகைப்படும்: ஒன்று சாமானிய கீதம்; இதன் சாகித்தியம் கடவுள் வணக்கமாக அமைந்திருக்கும்; ஏனையது, இலக்கண கீதம்; கீதம் எந்த ராகத்திலே அமைகிறதோ அந்த ராகத்தின் இலக்கணத்தை இதன் சாகித்தியம் விளக்கும். கீதம் என்பது பாடலை; ஆனால், சங்கீதத்திலே, கீதம் என்பது மேலே சொன்ன பண்புகளையுடைய பாடலை மட்டும் குறிக்கும். கீதங்களை இயற்றியவர், புரந்தர தாசர், கோவிந்த தீட்சிதர், வேங்கடமகி போன்றவர்கள். இவர்கள் கன்னடம், தெலுங்கு வடமொழிகளிலே கீதங்களை எழுதினார்கள். கீதங்களின் வேருயது, வேதநாயகம் பிள்ளையின் கீர்த்தனைகள். இவருடைய பாடல்கள் சிலவற்றிலே கீதங்களின் வளர்ச்சியைக் காண்கின்றோம்.

## கிருதியும் கீர்த்தனையும் :

கருநாடக சங்கீதத்திலே அமைந்துள்ள உருப்படிகளை கிருதிகள், கீர்த்தனைகள் என்று இரண்டாகப் பிரிப்பார்கள்; இவையே அன்றி, கீதம், ஸ்வரஜாதி, ஜதிஸ்வரம் தான வர்ணம் பத வர்ணம், பதம் ஜாவளி போன்ற வேறு பல உண்டு; என்றாலும், மிகுதியாக வழங்குவன கிருதியும் கீர்த்தனைகளுமே.

கீர்த்தனை சுமார் 500 வருஷங்களுக்கு முன் ஏற்பட்டது; கிருதி, கீர்த்தனையிலிருந்து மலர்ந்தது. தியாகையர் பாடல்களிலே கிருதி முழுவளர்ச்சி பெற்றுள்ளது. இவருக்குப் பின் இசைப் புலவர்கள்

கிருதிகளை இயற்றுவதிலேயே கவனம் செலுத்தினார்கள்; அதனால், கீர்த்தனைகள் புறக்கணிக்கப்பட்டன.

கிருதி கீர்த்தனைகளின் ஒற்றுமை வேற்றுமை என்ன? பல்லவி அனுபல்லவி சரணம் என்ற உறுப்புக்கள் இரண்டுக்கும் பொது. ஆனால், கிருதிகளிலே சரணங்களின் மேல் எல்லை ஐந்து; கீர்த்தனைகளிலே 16. கீர்த்தனையிலே அனுபல்லவி அமைய வேண்டும் என்ற நிபந்தனை இல்லை. கிருதிகளிலே தாது (—இசையமைதி--வர்ண மெட்டு) முதன்மை வாய்ந்தது. ஆனால், கீர்த்தனைகளின் முக்கிய அமிசம் மாது (-சாகித்தியம்) கடவுள் வாழ்த்து, ஒழுக்க நெறி, புராண கதைகளைத் தழுவிக் கீர்த்தனைகள் சமையும்; சாமானிய ராகங்களிலே எளிய போக்கிலே இவை உருவாகும்; இவற்றை சுலபமாகப் பயிலலாம்; கிருதிகளில் இசையமைதியே பிரதானம் ஆதலின், இசையிலே தேர்ச்சியுள்ளவர்களே அவற்றைப் பயிலக் கூடும். ராகபாவங்களை விரிவாகக் காட்டுவதற்குக் கிருதிகள் எழுந்தன. கிருதிகளிலே வர்ண மெட்டு முக்கியம்; கீர்த்தனையிலே சாகித்தியம் முக்கியம்.

**சருவ சமயக் கீர்த்தனைகள்:**

வேதநாயகம் பிள்ளையின் கீர்த்தனைகள், இயல் தமிழுக்குரிய இலக்கண அமைதிகளுடன், இசையமைதியும் பொருந்தி, சன்மார்க்கத்தை வளர்ப்பன; பாடுபவரையும் கேட்பவரையும் பரவசப் படுத்துவன. ஆதலின் அக்காலத்திலே எங்கெங்கு வினிகை நடக்குமோ அங்கங்கே இவருடைய கீர்த்தனைகளைப் பாடும்படி சபையோர் விரும்பினர்;

பாடுதற்கு இசைவாணரும் விரும்பினர். சங்கீத சாகித்திய வித்வான்கள் அவற்றை வியந்து கொண்டாடினர். உத்தியோகத்தர்களும் வக்கீல்களும், சங்கீத ஞானம் உள்ளவர்களும் தாமே மனனம் பண்ணி ஆர்வத்துடன் அவற்றைப் பாடுவார்கள். தங்கள் குழந்தைகளுக்கும் கற்பித்துப் பாடச் செய்வார்கள். இச்செயல்களாலும் கீர்த்தனைகளின் எளியநடை இனிய இசைப் பெருக்கு தொடர்ந்த பொருட் சிறப்பு முதலிய அழகிய அமைப்புகளாலும் அவை, தமிழகம் முழுவதும் அக்காலத்திலே பெருகி வழங்கின.

தாது வருடத்திலே கொடிய பஞ்சம் நேர்ந்தது. பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்குக் கஞ்சித் தொட்டிகளை அமைப்பித்து, வேதநாயகம் நாள்தோறும் கஞ்சி வார்க்கச் செய்தார். அதனால் பல ஏழைகள் உயிர் பிழைத்தனர். இந்த அறச் செயலை அறிந்த போது, கோபால கிருஷ்ண பாரதியார் வேதநாயகத்தின்மீது 'நீயே புருஷ மேரு' என்று தொடங்கும் கீர்த்தனத்தைப் பாடினார். பாரதியார் ஒரு சிவயோகச் செல்வர்; இசை ஞானி; நந்தன் சரிதத்தைப் பாடியவர். இவர் பாடிய கீர்த்தனங்களுள் இது ஒன்றே நரத்துதியாக உள்ளது. 'புருஷருள் மேரு' ஆகிய வேதநாயகம் பஞ்சத்தைப்பற்றிப் பாடிய இசைப்பாடல் இது. பஞ்சத்தின் கொடுமையைச் சித்தரிப்பதிலே இது நிகரற்று விளங்குகிறது. இதன் இசையமைதி இனிது; சொல் நடை எளியது.

இராகம்—உசேனி ; திசிரசாதி—மத்தியதாளம்.

### பல்லவி

பஞ்சம் தீர் ஐயா ! உனை அன்றித்
தஞ்சம் ஆர் ஐயா ! —பஞ்சம் தீர்

### அனுபல்லவி

வஞ்சக மேகம் உலோபர்கள் போலே
மண்ணில் மழை பொழி யாமையினாலே
சஞ்சல மாகித் தளர்ந்தோம் மேன்மேலே
சாமி ! கதி உன்தன் தாமரைக் காலே—பஞ்சம் தீர்

### சரணம்

எட்டு நாள் பத்து நாள் பட்டினியோடே
இடையிலே கந்தை இருகையில் ஓடே
ஒட்டி உலர்ந்த உடல் என்புக் கூடே
ஒரு கோடி பேர்கள் வசிப்பது காடே

ஊரும் இல்லாமல்,—குடிக்கத் தண்
ணீரும் இல்லாமல்,—அன்னம் எனும்
பேரும் இல்லாமல்,—பசி தீர்க்க
ஆரும் இல்லாமல்

பாரில் அனேகர் பரதேசி ஆனாரே
ஊரில் அனேகர் உயிர் மாண்டு போனாரே
—பஞ்சம் தீர் ஐயா

# கற்பிதக் கதைகள்

## 1. பிரதாப முதலியார் 2. சுகுணசுந்தரி

### இலக்கிய வகைகள்:

'உலகிலே ஒவ்வொன்ருக நாளடைவிலே வெளி வருகிற இரகசியங்களின் சின்னங்கள், வெகு காலத்துக்கு முன்னமே காணப்பட்டன' என்கிருர் வால்டர் பேடர். சிறுகதை நாவல் போன்ற இலக்கிய வகைகள் சமீபகாலத்திலே அரும்பி மலர்ந்தவை என்று பொதுவாகக் கருதப்படுகிறது. தொல்காப்பியருக்கு முந்திய காலத்திலேயே தற்போதைய இலக்கிய வகைகள் நிலவின என்ருல் நீங்கள் நம்பமாட்டீர்கள். தமது காலத்திலே வழங்கிய இலக்கிய வகைகளையும் வனத்தையும் தொல்காப்பியர் சொல்லும்போது நமக்குப் பிரமிப்பாக இருக்கிறது.

பாட்டிடை வைத்த குறிப் பினுனும்
பா இன்றெழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்ம்மொழியானும்
பொருளொடு புணர்ந்த நகை மொழியானும்
உரைவகை நடையே நான் கென மொழிப

என்ற தொல்காப்பிய சூத்திரத்தைத் தோற்றுவித்த பண்டைய இலக்கியங்கள் தற்போது நமக்குக் கிடைக்கவில்லை; காலகதியில் அவை மறைந்தன.

ஈசாப் கதைகள் பஞ்சதந்திரம் போன்றவை கட்டுக்கதைகள்; ஆங்கிலத்திலே 'ரொமான்ஸ்' என்பது கற்பிதக் கதை; இவற்றைப் 'பொருளொடு புணராப் பொய்ம்மொழி' என்பர் தொல்காப்பியர். சமத்காரம், குத்தல், புகழ்வதுபோலப் பழித்தல், சுடச் சுட பதிலுக்குப் பதில்போன்ற கேலி பரிகாசங்கள் * தழுவி, நகைச்சுவை நையாண்டி மலிந்த வாழ்க்கைச் சித்திரங்கள் பண்டே எழுதப்பட்டன. இவற்றைத் தொல்காப்பியர், 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' என்பர். மிகப் பழங்காலத்திலே வழங்கிய இந்த இலக்கிய வகைகள் தற்போது கிடைக்கவில்லை; கிடைத்திருப்பன தனிப்பாடல்களே. இவை பல்வேறு காலங்களிலே பாடப்பெற்றன. பல்வேறு சந்தர்ப்பங் களிலே பாடப்பெற்றன; இவற்றின் தொகுதியே சங்க நூல்கள். பழங்காலக் கவிப்பண்பை அறிதற்குச் சங்கநூல்கள் சிறந்த கருவி. ஆனால், பழங்கால வசன நடையை அறிவிக்க வல்ல 'நகை மொழி'களும் 'பொய்ம் மொழி'களும் கிடைக்காமற் போனது நமது துரதிட்டமே.

## இடைக்காலத்திலே :

சங்க காலத்துக்குப்பின் வந்த தமிழ்ப் புலவர்கள் தனிப்பாடல்களைத் தவிர்த்துக் காவியங்களைப் பாடினார்கள். காவியங்களைப் பின்பற்றிப் புராண இலக் கியம் எழுந்தது. ஐரோப்பியரான வீரமா முனிவரும், முஸ்லிமான உமறுப் புலவரும் இயற்றிய தேம்பா வணியும் சீறுவும் புராணங்களே. புராணங்களைத்

* Wit, Irony, Satine, Repartee.

தழுவி அந்தாதி கலம்பகம் போன்ற பிரபந்தங்கள் எழுந்தன. 'உரைவகை நடையே நான்கென மொழிப' என்ற பழைய வசன நூல்களின் வாசனைகூட இல்லை. உரையாசிரியர்கள் பழைய நூல்களுக்கு எழுதிய குறிப்புரை விளக்கவுரைகளே, தற்போது நமக்குக் கிடைத்திருக்கும் ஆதி வசன நடை.

**கற்பிதக் கதைகள்:**

மக்கள் வாழ்வு மனவுணர்ச்சி குணவிசேடங்களை முற்றுந் தழுவி, வாழ்க்கையின் சாயலாய் அமைந்த வசன நூல்களை முதன் முதலிலே தமிழில் எழுதியவர் வேதநாயகம் பிள்ளை. இவர் எழுதிய பிரதாப முதலியாரும் சுகுணசுந்தரியும் கற்பிதக்கதைகளே. இவற்றை இவர் சிருட்டிப்பதற்கு முன்னமே தாண்டவராய முதலியார் பஞ்சதந்திரக் கதையை எழுதினர். பின்னர் விநோதரச மஞ்சரி வெளியாயிற்று; இது ஒரு கட்டுரைத் தொகுதி. இதை எழுதியவர் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார். பிரதாப முதலியாரைப் பின்பற்றி ராஜமையர் கமலாம்பாளைச் சிருட்டித்தார்; பத்மாவதியை மாதவையர் படைத்தார். கழிந்த பத்து வருடங்களுக்கிடையே வெளிவந்து, வந்ததுபோல் மறைந்த நவீனங்களுக்குக் கணக்கில்லை. இவை பலவும் மொழிபெயர்ப்பே. இந்தி மராடம் வங்கம் அனைய வடமொழிகளில் அமைந்த குப்பை கூளங்கள் கூடத் தமிழிலே பெயர்க்கப்பட்டுவிட்டன. சுயம்பாகச் சமைந்த நவீனங்களை விரல் விட்டு எண்ணிவிடலாம்.

## நவீனங்களின் பண்பு :

கவிதையைப்போல 'நாவல்' கணப்போதிலே எழுவதல்ல; உணர்ச்சி பொங்கிய ஆவேசத்திலே உருவாகுவதல்ல. நாவலை எங்கே தொடங்குவது ? எப்படி நடத்துவது ? எப்படி முடிப்பது என்பதைப் பற்றியது அதன் வெற்றி.

முதன்மையான நாவலிலே மூன்று முக்கிய பண்புகளைப் பார்க்கலாம். ஒன்று, கதையின் அமைப்பு: மனதைக் கவர்வதாய்ப் பரபரப்பான சம்பவங்களும் நெருக்கடியான நிலைமைகளும் நிரம்பியதாய்க் கதை அமையவேண்டும்; கதையின் நிகழ்ச்சிகள் விறுவிறு என்று நடந்து, மேலும் என்ன என்ற ஆவலைத் தூண்ட வேண்டும். மற்றது கதாபாத்திரம்: நாவலிலே இயங்கும் பாத்திரங்கள் நம்மைப் போன்ற மானிடரே. நமது கனவுகளை லட்சியங்களை உணர்ச்சிகளைப் பாத்திரங்கள் எதிரொலிக்க வேண்டும். பாத்திரங்களின் நடை உடை பேச்சு—ஒவ்வொரு சிறு விவரமும் செய்தியும் வாழ்க்கையைப் பிரதிபலிக்கவேண்டும். நல்ல நாவலிலே, மூன்றாவதாக, அழகு இனிமை எளிமை வாய்ந்த பெருமித இலக்கிய நடையைக் காணலாம். பிரதாப முதலியார் சரிதத்திலே இந்த மூன்று பண்புகளையும் பார்க்கலாம். இதன் நடை உயிர் உடையது; ஓட்டம் உடையது. பாத்திரங்களோ நமக்கு மிகவும் பழக்கமானவர்கள். நிகழ்ச்சிகளும் நம் கண்முன் நிகழ்வனவே. ஆதலின், பிரதாப முதலியார், சுகுணசுந்தரி—இவர்களுடைய பேச்சு செயல்களிலே நாம் கலந்து விடுகிறோம். ஆதலின் இந்தக் கற்பிதக் கதைகள் நாவுக்கு நயம்; செவிக்குத்

தேன்; மனத்துக்கு மகிழ்ச்சி; அறிவுக்கு வளர்ச்சி; பொழுது போக்கிற்கு உல்லாசம்.

பிரதாப முதலியார் கற்பிதக் கதையே எனினும், வீரம் காதல் பயம் பொருமை முதலிய மானிட வுணர்ச்சிகளின் பிரதிபலிப்பாய்த் திகழ்கின்றது. ஒன்றுக்கொன்ருெவ்வாது முரண்பட்ட மானிட இயல்புகளின் போராட்டமாய்ப் பொலிகிறது.

## வாழ்க்கைச் சித்திரம் :

மக்களின் (அன்ருட) வாழ்க்கை நவீனத்துக்குரிய விஷயம்; ஆனல், வாழ்க்கை முழுவதையும் அதனுள் திணித்துவிட முடியாது. வாழ்க்கையை ஆதாரமாகக் கொண்டதுதான் நவீனம்; ஆனல், அது வாழ்க்கையைத் திருத்துதற்கும் உருப்படுத்துதற்கும் உதவுகிறது. அது பிரசார கருவியாய் எழுதப்படுவதல்ல; சமுகம் சமயம் அரசியல் பிரச்சனைகளை விளக்க அல்லது தீர்க்க அது எழுதப்படுவதல்ல; என்ருலும், ஆசார சீர்திருத்தங்களுக்கு அனுகூலமான மனப் பான்மையை அது உண்டு பண்ணுகிறது. சமுக ஊழல்களைப் பரிகசம் செய்ய அது ஏற்பட்டதல்ல, என்ருலும், குற்றங்குறைகளை அது நையாண்டி செய்யாமல் இல்லே. ஒழுக்கத்தை உபதேசிப்பது அதன் கடமை அல்ல; செய்திகளைச் சித்தரிக்க வேண்டுமே அன்றி, சரியா தப்பா என்று எடை போடக் கூடாது. என்ருலும், ஆசிரியனுடைய செய் திறனல், சம்பவ கோடனையால் போதனை அதிலே பொதிந்து விடுகிறது. ஆசிரியனுடைய அனுதாபங் களும் கருத்துக்களும் உணர்ச்சிகளும் எப்படியும் இடம்பெற்று, வாசகர்களின் மனத்தைக் கிளறி விடு

கிறது. நவீனம் தத்துவ நூல் அல்ல; எனினும் மெய்ப் பொருள் அறிவு அதிலே இடம் பெருமல் இல்லை. பிரதாப முதலியார் தமிழருடைய வாழ்க்கைச் சித்திரம்; ஒழுக்க நூல்; உபதேச நூல் சமுக சாத்திரம்.

## செய்திறன் :

வேதநாயகம் பிள்ளை, தாம் கண்டதையும் கேட்டதையும் வைத்துத்தான் பிரதாப முதலியாரை வரைந்தார். தமது கதைக் கென்று அவர் தெரிந் தெடுத்த விஷயமோ அழகும் சுவையும் பொருந்தியது. உயிருடையது; நிரந்தர உண்மைகளை விளக்குகிறது; உள்ளத்தைக் கிளறி, உணர்ச்சியைத் தூய்மை செய் கிறது. கதையை அவர் கையாளும் முறையிலே, மானிடரிடையே காணலாகும் முரண்பாடுகள் பூசல் கள் எதிர்ப்புக்களைச் சமரசப்படுத்தி, அவற்றினூடு மறைந்து கிடக்கும் இசைவை வெளிக் கொணர்ந்து விளக்குகிருர்.

தற்போதைய தமிழ் எழுத்தாளர் சிலர், தங்களைச் சூழ்ந்துள்ள காட்சி நிகழ்ச்சிகள் சிலவற்றைப் பார்த்து, அல்லது, தாங்கண்ட கேட்டவற்றைத் தம் நினைவி னின்றும் தொகுத்து, தங்கள் சொந்த விருப்பு வெறுப்புக்களைக் கதையிலே மறைத்து எழுது கிருர்கள். வேறு சிலர், வாழ்க்கையிலே காணப்படும் அனைத்தையும் நல்லது கெட்டது பெரியது சிறியது எதுவும் எஞ்சுதலின்றி, படப் பிடிப்பாக எழுது கிருர்கள். மற்றும் சிலர், ஆபாசங்களை அவலட் சணங்களை அளவு கடந்து மிகைப்படுத்தி, இல்லை என்ருல் பச்சையாகச் சித்தரிக்கின்ருர்கள். மேலும்

சிலர், கோபம் பொருமை காமம் போன்ற கீழ்த்தர உணர்ச்சிகளேத் தூண்டி, அல்லது, திடுக்கிடும் சம்ப வங்களேத் திணித்து, எழுதுகிருர்கள். இத்தகைய எழுத்தாளர் ரகத்திலே சேர்ந்தவரல்லர் நமது வேத நாயகம். கனிந்த அவருடைய கற்பனேயினும், முதிர்ந்த அனுபவத்திலும் தெளிந்த புலமையிலும் உருவாகிய பிரதாப முதலியார் சரித்திரம் வாழ்க் கையை எடுத்துக்காட்டி, வாழ்வதற்கு உதவுகிறது. வாழ்க்கைச் சிக்கல்களே அலசி, அவற்றைத் தீர்த்து வைக்கிறது ; அனுயாசமாக அறிவூட்டி, இதயத்தை யும் எளிதிலே இளக்கி, ஆன்ம வளர்ச்சிக்கு உதவுவதிலே இதற்கு இணையான நூல் வேருென் றில்லே.

---

## பிற்சேர்க்கை-1.

### ஆசிரியர் இயற்றிய நூல்கள்பற்றி

1. நீதி நூல் : 1858-ல் இயற்றி 1859-ல் வெளியிட்டார். 56 புலவர்கள் பாயிரம் பாடி இதைப் போற்றினார்கள். 44 அதிகாரம் 400 செய்யுட்கள் அடங்கிய இது, மேலும் 200 கவிகளால் விரிவாக்கப்பட்டு 1860-ல் இரண்டாம் பதிப்பு அச்சாகியது.

2. சித்தாந்த சங்கிரகம்: 1805 முதல் 1861 முடிய ஆங்கில மொழியில் அமைந்த சதர் கோர்ட்டு முடிவுகளைத் திரட்டி, தமிழிலே பெயர்த்து, 1862ல் வெளியிட்டார். 1862, 1863 வருடங்களின் தீர்ப்புக்களையும் தமிழ்ப்படுத்தி, 1864-ல் வெளியிட்டார். சட்ட நுணுக்கங்களைப் பற்றித் தமிழிலே அமைந்த முதல் நூல்கள் இவையே.

3. பெண் கல்வி
   பெண் மானம்
   பெண் மதிமாலை : 1869, 1870.

4. திருவருள் மாலை
   திருவருள் அந்தாதி
   தேவமாதா அந்தாதி : 1873.

5. பிரதாபமுதலியார் : 1876, 1885.

6. சருவ சமய சமரசக் கீர்த்தனை : 1878.

7. சுகுணசுந்தரி : 1887.
   தேவ தோத்திரமாலை : 1889.

பிற்சேர்க்கை-2.

# FAREWELL ADDRESS

*Presented By*

S. VEDANAYAGAM PILLAI,

*Retired District Munsiff of Mayavaram to his friends, when he was on the eve of departure for Tanjore for medical treatment.*

Being on the point of departure for Tanjore in quest of health, I humbly and respectfully bid adieu to the undermentioned gentlemen, at the risk of my being charged with popularity hunting, which according to the rules of christianity is to be scrupulously avoided, although according to other religions it is to be eagerly courted or sought after. But my conscience acquits me of the charge levelled at me by the rules of christianity and I am quite content therewith.

1. M. R. Ry. Y. Krishna Rao Avergal, pensioned Deputy Collector, Mayavaram who has laid me under everlasting obligation by his wise counsels, kind suggestions, and even personal exertions in preparing with his own hand the necessary correspondence for the safe investment of my money in Government Securities and for the recovery of the half-yearly interest.

2. M. R. Ry. A. Swami Iyer Avergal, Retired Tahsildar, whose friendship with me remains unbroken for several years past and to whom I am indebted for the recovery of my money from the

jaws of insolvency in as much as the estate of my debtor formed the bone of contention among several litigants who could have no doubt brought the estate to utter ruin but for Mr. Nelson, the District Judge who put an end to the unhappy litigation by deciding in lemine in favour of the windows against the supposed adopted son who only first came forward to claim the estate.

3. M. R. Ry. The District Munsiff, of Mayavaram who, although personally unacquainted with me gives repeated proofs of his kind regards towards me and whose advance towards my friendship I am unfortunately unable in the present state of health to reciprocate. This forms a perpetual source of the deepest grief to me.

4. M. R. Ry. The Thasildar of Mayavaram who is always kind to me and readily orders the immediate disbursement of my pay, without insisting on my personal attendance as his predecessor once did, for which he received a severe wigging from his superior; the Deputy Collector.

5. M. R. Ry. The Sub-Registrar, who now and then gives me wholesome advice regarding the way in which the safety of my money is to be ensured, and who in respect of public spirit, straight-forwardness, steadiness of friendship, extent of learning and hatred of humbug in every shape, is only inferior, to his brother Mr. Subramaniya Iyer whose patriotism, noble immolation of self at the shrine of public good bold advocacy of what is right, and fearless exposure of wrong, however obscure and insignificant may be

the individual against whom it is levelled, from admirable features of his character. There is not a scintilla of doubt that had he entered into the public service he would have out shone the rest of the public servants and acquired an immense fortune by this time.

6. M. R. Ry. The Sheristadar who readily carries out the orders of his superior the Thasildar for the disbursement of my monthly salary.

7. M. R. Ry. The Police Inspector who while at Nunnelum shielded my agent from the resentment and persecution of a great Mirasdar.

THE BAR OF THE DISTRICT MUNSIFF'S COURT

8. M. R. Ry. K. Luktchumana Iyer Avergal, a leading member of the bar, of whose merits I entertain a very high opinion, and who has no equal, but D. Duraiswami Pillai, another leader of the bar.

9. M. R. Ry. Thiruvenkata chariar who is a perfect Sanskrit Scholar and who is well at home with Hindu Law, and whose character is unexceptionally good in every respect.

10. M. R. Ry. Chakrapauny Iyengar, a first grade pleader who is second only to Messrs. K. Luktchumana Iyer and D. Duraiswami Pillai.

11. M. R. Ry. Gopala Iyer who bears a good character and who, had he continued as a clerk in the public service as appointed by me, would have risen to a higher rug of the official ladder, but for his unwise choice of the legal profession wherein he is but a cipher.

12. M. R. Ry. Venkatasubba Iyer, who has good practice on account of his amiable character.

13. M. R. Ry. Krishna Rao Avergal a perfect Sanskrit Scholar who has every Sanskrit Slogha of the Hindu-Law at his figner's end.

## CHRISTIAN MEMBERS OF THE BAR

14. M. R. Ry. D. Duraiswamy Pillai Avergal to whom my remarks at K. Luktchumana Iyer Avergal apply Mutalis Mutandis.

15. M .R. Ry. A. Ponnuswami Pillai Avergal whose legal services are eagerly sought by the clients on account of his trustworthiness and pain taking in understanding the merits of cases.

## PRIVATE GENTLEMEN

16. M. R. Ry. Agora sastriar Avergal who is a worthy member of a worthy family, and who is a grandson of a **District** Munsiff, Mayavaram, and who unlike other Mirasdars is actuated by liberality towards his ryots and who would rather suffer extensive loss than impoverish and ill-feed them.

17. M. R. Ry. Subbanna Rao who belongs to a respectable family, and who has been a staunch friend of mine, ever since I came to Mayavaram.

18. M. R. Ry. Kothandarama Iyer who is an exception to the other Mirasdars, who as above stated, are the oppressors of the cultivators.

Mayavaram,
17th July 1889. } (*Signed*) S. VEDANAYAGAM.

பிற்சேர்க்கை-3.

*The "Hindu"—24th july*, 1889.

The Late Mr. S. Vedanayagam Pillai:—

We regret to record the death of Mr. Vedanayagam Pillai, pensioned District Munsiff, a resident of Mayavaram, on the night of the 21st from dropsy. As District Munsiff, he was very popular and discharged his duties with great credit and ability, at a time when Munsiffs of the present type were rare. He was distinguished also for his independance ; he once declined to put up with the treatment accorded to him by a judge, who was then well-known for his idiosyncrasies, and who is now practicising in the Madras Bar. But in Mr. Vedanayagam Pillai's case, it was not his official life that contributed to raise him in the estimation of his countrymen. He was *an erudite scholar of Tamil* and devoted his lifetime to the embellishment of Tamil literature. He was a *Tamil Novelist* and *Tamil Poet*. His prose and poetical works are read with great avidity by the Tamil-knowing population. The great merit of his works was the purity of expression and the moral precepts of which they are so full His ambition was to create a good Tamil literature so as to suit the modern taste of his countrymen, in which he attain ed eminent success. He interested himself very

much in the successful administration of the local Municipality, over the Council of which he presided for several years. The following are some of his well-known productions; Penmathi-malai, Neethinool thiratu, Prathaba Mudaliar charitram, and Suguna Sundari. In his death, the Native community have lost a worthy citizen, a talented Tamil writer, in short, one whose literary attainments and whose earnest longing to improve the social and intellectual condition of his fellow Countrymen have won for him their everlasting gratitude. The present generation of young men would find in his life much to admire and imitate. The news will cause great sorrow to all those that are acquainted with him or his writings.

